# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – மாசி, பங்குனி
2022 – பிப்ரவரி, மார்ச்

116, 117

26.01.2022 அன்று கோவிலூர் மடாலய வளாகத்தில் நடைபெற்ற குடியரசு நாள் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


பிலவ – மாசி & பங்குனி

2022 – பிப்ரவரி & மார்ச்  இதழ் – 116 & 117



சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. ம. கார்மேகம்

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்".
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


## பொருளடக்கம்




தனி இதழ்  ரூ 10.00
ஆண்டுச் சந்தா  ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




சேவேந்து கொடியானைச் சேர்ந்தாள் தன்னைச்
செங்கமலப் போதொத்த செல்வி யாளை
சிறுவண்டு தென்பாடித் திரியப் பூக்கள்
செங்குமுதம் கமலமொடு சேர்ந்து நிற்கப்
பாவேந்து தமிழ்ப்புலவோர் பாடல் மாந்தும்
பச்சைமயில் பரமேட்டி பவள வாயாள்
பனிபடர்ந்த மலையிருப்பாள் குயில்கள் பாடிப்
பறந்துதிரி வன்னிவனம் பாது காக்கும்
பூவேந்து குழல்மாது புருவ வில்லாள்
புன்னகையாள் தவளநிறப் பொருப்பின் மேலாள்
புரிகுழலாள் வரிவிழியாள் பூத நாதன்
போற்றுதிரு மனையாட்டி கழனி வாசல்
காவேந்து வன்னிவனம் காக்கும் நெல்லை
கால்வணங்கி மாலகற்றி மங்கை முன்னர்க்
கைகுவித்தார் தம்வாழ்வு கனிய வைப்பாள்
கண்ணுதலான் தன்துணையைக் கருத லாமே.

*– காப்பியக் கவிஞர் நா. மீனவன்*

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

சென்ற இதழ்களில் தாய்க்குச் சிறப்பாகத் தொண்டு செய்த மக்களைப் பற்றியும் தந்தைக்குத் தொண்டாற்றிய மக்களைப் பற்றியும் நாம் சிந்தித்துச் சில செய்திகளைப் பகிர்ந்து கொண்டோம். இப்பொழுது மூன்றாவது தெய்வமாக சாஸ்திரங்கள் புராணங்கள் கூறுகின்ற ஞான குருவிற்குச் சீர்மிகு தொண்டாற்றிப் புகழ்பெற்ற சீடரைப் பற்றியும் குருவிற்குத் தொண்டாற்றும் மாணவர்கள் பற்றியும் நாம் சிந்திப்போமாக. நம்முடைய ஆதி குருமுதல்வரும் மடாலயத்தின் நிறுவனருமான கோவிலூர் ஆண்டவர் தன்னுடைய சற்குருநாதர் ஸ்ரீலஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிக சுவாமிகள் அவர்களின்பால் கொண்டிருந்த அபிமானமும் குருபக்தியும் நம்முடைய மடாலய வரலாற்றில் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டுள்ளன.

இந்தக் கோவிலூர் மடாலயம் தோற்றுவிக்கப்படவும் ஸ்ரீ திருநெல்லை அம்மன் உடனாய அருள்மிகு கொற்றவாளீஸ்வரர் திருக்கோவில் கற்கோவிலாக அமையவும் முதன்மைக் காரணமாக இருந்தது ஆண்டவரின் குருபக்தியும் குருவின் பத்தினியின்பால் கொண்ட தேவபக்தியும் தாம்; குருபத்தினியின் வேண்டுதலுக்கு இணங்க மயில் குஞ்சுகள் தேடிவந்த காரணத்தினால் தான் சிதிலமடைந்து கிடந்த திருநெல்லை கொற்றவாளீஸ்வரர் சன்னதிகள் ஆண்டவரின் கண்ணில் தட்டுப்பட்டு புதுவாழ்வு பெற்றன. அதனைத் தொடர்ந்து வேதாந்த பாடம் நடத்தத் தொடங்கி அதற்கு ஓர் நிரந்தரமான இடம் வேண்டுமென்று கோவிலூர் திருமடத்தை 1814ல் கட்டத் தொடங்கி 1818ல் சில பகுதிகளைக் கட்டி முடித்து கோவிலூர் திருமடத்தை அமைத்து அதன் ஆதி குரு முதல்வராக முதல் மடாதிபதியாக 1818ல் பதவியேற்று 29 ஆண்டுகள் அருள் ஆட்சிபுரிந்து வேதாந்த பாடங்களைச் செவ்வனே பல்கலைக்கழகப் பாடத்திட்டம் போல் 14 சாஸ்திரங்களைக் கற்பித்து வந்துள்ளார் கோவிலூர் ஆண்டவர் (லட்சணா விருத்தி, வைராக்கிய தீபம் ஆகிய இரண்டு நூல்களும் பின்னர் சேர்க்கப்பட்டுப் பாடத்திட்டம் 16 நூல்களைக் கொண்டது

ஆனது இத்தனை உத்தம காரியங்களுக்கும் ஆதி காரணமாக அமைந்தது நம் குரு முதல்வர் கோவிலூர் ஆண்டவர் தன் குருமகனார் மீது கொண்ட குருபக்தியே ஆகும்.

1818ல் கோவிலூர் மடத்தை ஸ்தாபித்த காலத்தில் ஞானகுரு உகந்தலிங்க சுவாமிகள் கோவிலுக்கு வந்ததாகத் தெரியவில்லை. ஆனால் 1819 பங்குனி மாதம் மக நட்சத்திரத்தில் ஞானகுரு ஸ்ரீலஸ்ரீ உகந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள் சித்தி அடைந்தது அறிந்து பொருள் வைத்தசேரி கிராமத்திற்குச் சென்று உகந்தலிங்க சுவாமிகளின் குடும்பத்தாரைச் சந்தித்து ஆறுதல் கூறினார் என்று தெரியவருகிறது. மேலும் பொருள்வைத்தசேரி ஸ்ரீ சௌந்தரநாயகி சமேத ஸ்ரீ சொர்ணபுரீஸ்வரர் திருகோவிலுக்கு இடம் வாங்கி ஸ்ரீலஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிக சுவாமிகளின் அதிஷ்டான திருக்கோவிலையும் அங்கே வேதாந்தம் கற்பிப்பதற்குத் தகுதியான ஓர் மடத்தையும் ஸ்தாபித்து உள்ளார்கள். அத்திருக்கோவிலும் திருமடமும் 200 ஆண்டுகளாக வேதாந்த மாணவர்களுக்கும் உள்ளூர் பக்தர்களுக்கும் சீராகப் பயன்பட்டு வருகின்றன. அண்மையில் மார்ச் 6ம் தேதி பிலவ வருடம் மாசி மாதம் 22ம் தேதி (6.03.2022) ஞாயிற்றுக் கிழமை அன்று சிறப்பாக உள்ளூர் மக்களும் நம்முடைய கல்வி நிறுவனங்களின் ஆசிரியர்களும் அலுவலர்களும் திரளாகக் கலந்து கொண்டு குருவருளும் திருவருளும் பெற்றோம்.

இந்நிகழ்ச்சிகளுக்கு எல்லாம் ஆதிகாரணம் ஆண்டவர் பெருமான தன்னுடைய சற்கருநாதர்பால் கொண்ட பேரன்பும் பெரும் பக்தியும் ஆகும்.

இதே போல் மற்றொரு சம்பவம் நாம் நினைவில் கொள்ள வேண்டும். 19ம் நூற்றாண்டில் துறவிகள் தாம்பூலம் தரிப்பதும் இயற்கை உபாதையைக் கழிப்பதற்காகச் சுருட்டுப் பிடிக்கும் பழக்கமும் சில துறவிகள்பால் இருந்து வந்தன. நம்முடைய மூன்றாவது மடாதிபதி கருணாநிதி என்று அழைக்கப்படும் சிதம்பரம் ஞான தேசிக சுவாமிகளுக்கு இரவு உணவு அருந்தியபின் வெற்றிலைபோடும் பழக்கமும் இருந்து வந்தது. ஒரு சீடர் வெற்றிலை நரம்பைக் கிள்ளிச் சுண்ணாம்பு தடவி ஒவ்வொன்றாகக் குருவிற்குக் கொடுக்கும்

பழக்கமும் இருந்தது. அப்படி ஒரு நாள் வெற்றிலை மடித்துக் கொண்டிருந்தார் சீடர் ஒருவர். அத்துடன் வேதாந்தப் பாடல்களையும் பாடிக்கொண்டு வெற்றிலை மடித்துக் கொண்டிருந்தார். பாடலைக் கேட்டுக் கொண்டே குருநாதர் கண் அயர்ந்துவிட்டார். வெற்றிலை மடித்துக் கொண்டிருந்த சீடர் குருநாதர் எப்பொழுது வேண்டுமானாலும் விழித்து வெற்றிலை கேட்கலாம் என்று தயாராக வைத்துக் கொண்டு காத்திருந்தார். குருநாதர் காலை புலர்ந்த சமயத்தில் விழித்துப் பார்த்தால் வெற்றிலை மடித்துக் கையில் வைத்து நீட்டிக் கொண்டிருந்த சீடர் கண்ணில் பட்டார். "ஏப்பா நான் தூங்கிட்டேனே வெற்றிலையை மடித்து வைத்துக் கொண்டிருக்கிறாயே" என்று கேட்டார். குருமகான் எப்பொழுது வேண்டுமானாலும் வெற்றிலை கேட்கலாம் என்று காத்துக் கொண்டிருந்தேன் என்று சொன்னார். உடனே குருநாதர் கருணாநிதி சுவாமிகள் அப்பனே உனக்கு ஞானம் வந்துவிட்டது, பக்குவம் அடைந்துவிட்டாய். இனிமேல் இங்கே தங்கிக் கற்க வேண்டிய அவசியம் இல்லை. நீ மற்றவர்க்கு வேதாந்தம் கற்பிக்கலாம் சென்று வா என்று ஆசிகூறி அனுப்பி வைத்தார். இப்படிக் கண்துஞ்சாது குருநாதர் பணி செய்த சீர்மிகு சீடர் தான் மானாமதுரையில் எழுந்தருளி அருள்பாலித்து வரும் நாராயணசுவாமிகள். இப்படிப்பட்ட அருமையான சீடர்களைப் பெற்ற காரணத்தால் இன்றும் கோவிலூர் திருமடம் வேதாந்தம் பரப்பும் பணி, சமுதாயப் பணி, தாய்மொழிப் பணி, கல்விப்பணி என அனைத்துத் துறையிலும் புகழ்பெற்று விளங்கி வருகிறது. மேன்மேலும் வளர்ந்து மகா உன்னத நிலையைக் கோவிலூர் திருமடம் அடைய வேண்டும் என்று அனைத்துக் குருமார்களையும் சீடர்களையும் மனமார வணங்கி வாழ்த்துமாறு ஆசிர்வதிக்குமாறு வேண்டுகிறோம்.

**ஸ்ரீ சற்குருநாதர் துணை**



## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### சடாயு, அயோமுகி, கவந்தன், சபரி

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

தன் ஆசைக்கும் வேண்டுகோளுக்கும் சீதை இணங்கி வர மறுத்த காரணத்தால் சீதையை நிலத்தோடு பெயர்த்து எடுத்துத் தேரில் வைத்து இலங்கை நோக்கிப் புறப்பட்டான் இராவணன். சீதையைக் கையைப் பிடித்து இழுத்துத் தேரில் ஏற்றினான் என்பது வால்மீகியின் கூற்று. ஆனால் கம்பர் சீதையின் பண்பு நலனுக்குக் குறை வராமல் இருக்கவும் பிரம்மா ராவணனுக்கு அளித்த சாபத்தை மறக்காமல் சீதையை நிலத்தோடு பெயர்த்து எடுத்துத் தேரில் ஏற்றினான் என்று கூறுகிறார். இதனை

*செவிகளைத் தளிர்க்கை யாலே*
*சிக்குறச் சேமம் செய்தாள்*
*கவினும்வெம் சிலைக்கை வென்றிக்*
*காகுத்தன் கற்பி னேனைப்*
*புவியிடை ஒழுக்கம் நோக்காய்*
*பொங்(கு)எரிப் புனிதர் ஈயும்*
*அவியை, நாய் வேட்ட(து) என்ன,*
*என் சொனாய் அரக்க ! என்னா.*

என்று கம்பர் கவி கூறுகிறது.

வழிநெடுகக் கடவுளரையும் தேவர்களையும் உயிரினங்களையும் தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டி ஓலமிட்டு வந்தாள்.

*மலையே ! மரனே ! மயிலே ! குயிலே !*
*கலையே ! பிணையே ! களிறே ! பிடியே !*
*நிலையா உயிரே ! நிலைநே டினிர் போய்*
*உலையா வலியார் உழைநீர் உரையீர் !*

சீதை சற்றும் தளராமல் தன்னை எப்படியும் இராமர் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையோடு தைரியமாக இருந்தாள். தன்னுடைய

அணிகலன்களைக் கழற்றி ஒவ்வொன்றாக வழிநெடுகப் போட்டுக் கொண்டு வந்தாள். பர்ணசாலைக்குத் திரும்பி வந்த இராம இலக்குவர் தன்னைக் காணாது தேடும் காலம் இந்த அணிகலன்களைக் கொண்டு யூகித்து தன்னை யாரோ நிலத்தோடு பெயர்த்து எடுத்துக் கொண்டு போகிறார்கள் அறிந்து வருவர் என்று எண்ணியே அணிகலன்களை ஒவ்வொன்றாக நிலத்தில் போட்டுக் கொண்டு வந்தாள்.

வானூர்தி பறக்கின்ற சத்தமும் சீதையின் புலம்பல் சத்தமும் கேட்டு கழுகினத்தின் மன்னனான சடாயு வானோக்கிப் பறக்க தசகண்ட இராவணன் சீதையை வானூர்தியில் வைத்துக் கடத்திச் செல்வதைப் பார்த்து ஆத்திரம் கொண்டு வானூர்தியை நோக்கிப் பறந்து சென்று எதிர்த்து நின்றான். தன்னுடைய விரிந்து பரந்த அகன்ற சிறகுகளால் தேரை மறித்து வலிமையோடு போராடினான். ஆனால் இராவணனுடைய வாள் வீச்சிற்கு எதிராக அதிக நேரம் போராட முடியவில்லை. இலங்கேஷ்வரன் கருட மன்னனின் சிறகுகளை வெட்டி வீழ்த்தி வெற்றி கொண்டான். சிறகுகள் அறுப்பட்டு வேதனையோடு நிலத்தில் விழுந்து சடாயு புலம்பிக் கொண்டு இருந்தார். இராம லட்சுமணர் வரும் வரையில் தன்னுடைய உயிர் போகக் கூடாது என்று வைராக்கியமாக உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு கிடந்தார்.

சடாயு நினைத்தது போலவே இராம லட்சுமணர் சீதையின் அணிகலன்களுடைய துணை கொண்டு தேடி வந்த காலத்து சடாயு சிறகுகள் அறுபட்டு பிராணாபத்திலே புலம்பிக் கொண்டு இருந்ததைப் பார்த்து இருவரும் சடாயுவை நெருங்கி அவர் உயிரைக் காப்பாற்ற முயன்றார்கள். சடாயு சீதையை இராவணன் கடத்திக் கொண்டு இலங்கை நோக்கிச் செல்வதைப் புலம்பிக் கொண்டு சொன்னார். இதற்காகவே தன் உயிரை வைராக்கியமாகக் காத்துக் கொண்டு இருந்தேன் சீதா பிராட்டியைக் காப்பாற்றுவீர்களாக என்று சொல்லி உயிர் நீத்தார்.

*அஞ்சிறை குருதியாறு அழிந்து சோரவும்*
*வஞ்சியை மீட்டிலென் என்னும் மானமும்*
*செஞ்சவே மக்கள்பால் சென்ற காதலும்*
*நெஞ்சுறத் துயின்றனன் உணர்வு நீங்கலான்.*

தந்தையின் நண்பரான சடாயு மறைவு கண்டு இராமரும் லெட்சுமணரும் மிக வருந்தினார்கள். சடாயுவிற்கு இறுதிச் சடங்குகளைத் தங்கள் தந்தைக்குச் செய்ய முடியாத இறுதிச் சடங்குகளைச் செவ்வனே செய்து சடாயு வானுலகம் செல்ல அருளினர்.

தன் தந்தைக்கு மிகப் பிரியமான நண்பரான சடாயு என்னும் கழுகின மன்னனுக்குத் தக்கபடி நீர்க்கடன் செய்து முடித்து மனவருத்தத்துடன் இருவரும் புறப்பட்டனர். போகின்ற காட்டு வழியில் அயோமுகி என்னும் அரக்கி வயிறே வாயாகக் கொண்டு கண்ணில் தெரிகின்ற உயிரினங்கள் அனைத்தையும் உணவாக்கிக் கொள்கின்ற கொடுமை நிறைந்த அயோமுகி எனும் அரக்கியைச் சந்தித்தார்கள்.

இலக்குவரை அப்படியே அள்ளி வயிற்றுக்குள் தள்ளிய அயோமுகியின் வயிற்றில் நுழைந்த இலக்குவன் அழிக்கும் கடவுளான ருத்திரரைப் போல் தோற்றமளித்து அவள் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்தான். இது சமயம் இலக்குவனைத் தேடிக் கொண்டு வந்த இராமரை நோக்கி அண்ணா வருந்தாதீர் நான் இதோ உங்கள் முன் வருகின்றேன் என்று ஓடோடி வந்து சேர்ந்து கொண்டார்.

பின்னர் இருவரும் இராவணனின் தேர் சென்ற திக்கை நோக்கிச் செல்லும்கால் கவந்தன் என்னும் அரக்கன் தென்பட்டான். தலையில்லாத முண்டமாக உருக் கொண்டு பெருத்த வாயும் வயிறும் உடையவனாகக் கவந்தன் எனும் அரக்கனைக் கண்டு மனவிரக்தியால் வருந்திக் கொண்டிருந்த இராமர் "இலட்சுமணா சீதை பிரிந்து சென்று விட்டாள். எனக்கு வாழ்க்கை வெறுத்து விட்டது. நான் இவன் வயிற்றில் புகுந்து உயிர் விடுகிறேன். நீ கோசலத்திற்குத் திரும்பிச் செல்வாயாக"

என்று சொல்லிக் கொண்டே கவந்தன் வயிற்றுக்குள் புகுந்தார். நெஞ்சம் பொறுக்காத இலக்குவன் கவந்தனை வாளால் வெட்டி வீழ்த்தினான். இராம இலக்குவரால் கொல்லப்பட்டு மாண்ட கவந்தன் தன்னுடைய சுயரூபத்தை அடைந்தான். இராமரைப் பார்த்து எனக்கு உம்முடைய அருளாலே பூரண ஞானம் கிடைத்துவிட்டது. உம் அருளால் பரமனடி சேர்கின்றேன் நன்றி என்று உரைத்து இந்த பேறுபெற நான் என்ன புண்ணியம் செய்தேனோ என்று திருவடி சேர்ந்தான்.

*"மாயப் பிறவி மயல்நீக்கி மாசிலாக்*
*காயத்தை நல்கித் துயரின் கரையேற்றிப்*
*பேயொத்த பேதைப் பிணக்கறுத்த எம்பெருமான்*
*நாயொத்தேன் என்ன நலன் இழைத்தேன் நான்" என்றான்.*

அதன் பின்னர் தொடர்ந்து சென்ற காலத்து, சபரி எனும் வேட்டுவப்பெண் இராம லட்சுமணரைச் சந்தித்து அவர்கள் திருவடி வணங்கிப் பசியாறிச் செல்லுமாறு வேண்டிக் கொண்டாள். அவளால் சேகரிக்கப்பட்ட அளித்த அருமையான ருசி உள்ள காய் கனிகளைப் புசித்து அவருக்கு அருள் புரிந்தனர்.

*அருந்தவத்(து) அரசி தன்னை*
*அன்புற நோக்கி, நங்கள்*
*வருந்துறு துயரம் தீர்த்தாய்*
*அம்மனை வாழி ! என்றார்*

இவர்கள் சத்தியாலும் அருளாலும் சபரி பிறப்பு நீக்கி மேலுலகம் அடைந்தாள். ஆரண்யகாண்டம் சபரியின் பிறப்பு நீங்கும் படலத்தோடு நிறைவு பெறுகிறது. அடுத்து நாம் கிட்கிந்தா காண்டத்தைப் படித்துப் புரிந்து கொள்வோமாக.

*(தொடரும்...)*

# ஓம் நமோ நாராயணாய! 108 திவ்யதேசங்கள்

## 16. திருக்கண்ணபுரம்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பதினேழாவது திவ்ய தேசம், திருக்கண்ணபுரம். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பதினேழாவது திருத்தலமாகும். இத்தலம் கும்பகோணத்தில் இருந்து திருவாரூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. நன்னிலத்திலிருந்து நாகப்பட்டினம் செல்லும் வழியில், திருப்புகலூர் என்ற ஊரில் இறங்கி, சுமார் ஒருமைல் தொலைவு நடந்து சென்றும் இப்பதியை அடையலாம்.

இத்தலம் கிருஷ்ணாரண்ய தலங்களில் ஒன்றாகும். பஞ்ச கிருஷ்ண சேத்திரங்களான திருக்கண்ணங்குடி, திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை, திருக்கவித்தலம், திருக்கோவிலூர் ஆகியவற்றுள், இத்தலம் ஒன்றாகும்.

வசு என்னும் மன்னன், வானத்தில் பறக்கும் சக்தி பெற்றவனாதலால், உபரிசரவசு என்றழைக்கப்பட்டான். ஒரு முறை, தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரில், உபரிசரவசு என்ற இந்த மன்னனின் உதவியால், தேவர்கள் வெற்றி பெற்றனர்.

போர் முடிந்து வீரர்களுடன் அம்மன்னன் திரும்பி வந்து கொண்டிருக்கையில், அனைவருக்கும் தாகமெடுத்தது. தாகம் தீர்ப்பதற்காக, கிருஷ்ணாரண்யத்தில் இறங்கினர். அவ்விடத்தில், ஊன் உறக்கமின்றி, பெருமாளை மட்டுமே எப்போதும் தியானித்து, வணங்கி வந்ததால், மிகவும் மெலிந்த தேகத்தினரான முனிவர்கள் தவம் செய்து கொண்டிருந்தனர். அவர்களைச் சாமைக் கதிர்கள் என எண்ணிய உபரிசரவசுவின் வீரர்கள், அவற்றை உட்கொள்ளலாம் என எண்ணி, முனிவர்களைத் தம் வாளால் கொய்ய எத்தனித்தனர். முனிவர்களின் அபயக்குரல் கேட்ட எம்பெருமான், ஒரு பதினாறு வயது பாலகனாக வந்து படையைத் துவம்சம் செய்யத் தொடங்கினார். இச்சிறுவன், பெருமாள் என அறியாத உபரிசரவசு, அசுரர்களை வென்ற நமக்கு இச்சிறுவன் ஒரு பொருட்டோ, என எண்ணி, பல அஸ்திரங்களை ஏவி, இயலாமல் போக, இறுதியில் அஷ்டாச்சர மந்திரத்தை ஜெபித்து,

நாராயண அஸ்திரத்தை ஏவினார். அந்த அஸ்திரம் சுழன்று சுழன்று அப்பாலகனின் காலடியில் சரணடைய, அப்போது தான் தன்னுடன் போரிட்டது மஹாவிஷ்ணுவே என்று அறிந்தார் வசு மன்னர். பின் எம்பெருமானின் காலில் வீழ்ந்து பாவமன்னிப்பும் கேட்டார். மன்னித்த எம்பெருமான், உபரிசரவசுவின் வேண்டுகோளை ஏற்று, அவரது மகளான பத்மினியை மணம் புரிந்து கொண்டார்.

பின், அங்கிருந்த ரிஷிகளின் வேண்டுகோளுக்கிணங்க, இத்தலத்திலிருந்து நீலமேகப் பெருமாளாய் அருள் பாலிக்கத் தொடங்கினார். அம்முனிவர்களெல்லாம் மாமிசத்தில் ஆசை இல்லாதவர்கள். உடம்பை விரும்பாதவர்கள். சரீரத்தை விரும்பாமல் ஆத்மாவை விரும்புபவர்கள். பலம் என்றால் மாமிசம். உத்பலம் எனில் மாமிசத்தால் உருவாக்கப்பட்ட உடம்பில் விருப்பமில்லாதவர்கள். உடலில் விருப்பமில்லாதவர்களுக்கு முக்தி அளிக்கும் பெருமாள். ஆதலால், உத்பலாவதக விமானத்தின் கீழேயே இப்பெருமாள் எழுந்தருளியுள்ளார். திருக்கோயிலை வலம் வரும் போது, இத்திருக்கோயிலின் விமானம் கண்ணில் படுவதில்லை.

இங்கிருக்கும்

| | | |
|---|---|---|
| மூலவர் | - | நீலமேகப்பெருமாள் |
| உற்சவர் | - | சௌரிராஜப்பெருமாள் |
| தாயார் | - | கண்ணபுரநாயகி |
| தீர்த்தம் | - | நித்யபுஷ்கரணி |
| விமானம் | - | உத்பலாவதக விமானம் |
| கோலம் | - | கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம் |

நீலமேகப்பெருமாள், இத்தலத்தில் மற்ற கோயில்களில் இருப்பது போல் அபயக் கரத்துடன் இல்லாமல் தானம் பெறும் கரத்துடன் உள்ளார். அதாவது, பக்தர்களின் துன்பங்களையெல்லாம் அவர் பெற்றுக் கொள்ளவே, அக்கோலத்தில் உள்ளார். மேலும், எந்த விநாடியிலும் புறப்பட்டு, துன்பம் தருவோரை அழிக்கத் தயார் நிலையில் கையில் ப்ரயோகச் சக்கரத்துடன், எட்டெழுத்து மந்திரத்தின் வடிவமாகக் காட்சி தருகிறார்.

இக்கோவிலில், ஸ்ரீதரன் என்னும் அர்ச்சகர் பூஜை புரிந்து வந்தார். அவர், கோயிலைச் சாத்தும் நேரம் வந்து விட்டபடியால், இருந்த ஒரு மாலையை, தான் காதல் கொண்ட கன்னிக்குக் கொடுக்க, அவளும் சூடிக் கொண்டு விட்டாள். எதிர்பாராமல், அந்த இரவு நேரத்தில், சோழராஜன் சந்நதிக்கு வந்துவிட்டார். செய்வதறியாது திகைத்த அர்ச்சகர், தன் காதலிக்குக் கொடுத்த மாலையை வாங்கி வரச் செய்து, பெருமாளுக்குச் சூட்டிய மாலையெனச் சோழனுக்கு அளித்தார். அரண்மனைக்குச் சென்ற அரசன், அம்மாலையில் இருந்த தலைமுடியைக் கண்டு அதிர்ச்சியுற்றார். இது குறித்து அர்ச்சகரிடம் வினவ, அம்முடி, பெருமாளின் தலையில் உள்ள முடிதான் எனத் தெரிவித்துவிட்டார். இதனைச் சோதிக்க, மறுநாள் காலை சோழ மன்னன் சந்நதிக்கு வருவதாகத் தெரிவித்தார். உடனே, பெருமாளிடம், அர்ச்சகர் அடைக்கலம் புகுந்து, தன்னைக் காப்பாற்றுமாறு இறைஞ்சினார். மறுநாள் சோழ மன்னன் சந்நதிக்கு வர, பெருமாள் கட்டுமுடியோடு காட்சி கொடுக்கின்றார். அதிலிருந்து ஒரு கேசத்தைப் பிடித்து இழுக்குமாறு, மன்னன் ஆணையிட்டார். இழுத்த மாத்திரத்தில், அதனின்றும் தெறித்த ரத்தத் துளிகள் மன்னனின் முகத்தில் தெறிக்க, இறைவனின் நாடகத்தை உணர்ந்த மன்னன், அர்ச்சகரின் பக்தியை மெச்சி, தானும் இப்பெருமானுக்கு அடிமையானார். இதன் காரணமாக, இத்தலத்தில் உள்ள பெருமானுக்கு சௌரிராஜன் என்னும் திருநாமம் உண்டாயிற்று. உற்சவர் பெயரால் தான் இக்கோவிலும் மன்னனது "சௌரிராஜப் பெருமாள் கோவில்"என்று அழைக்கப்படுகின்றது. உற்சவர் சௌரிராஜன் என்பதால், தலைநிறையக் கட்டுமுடி, கொண்டை மற்றும் புஷ்ப அலங்காரத்தில் காட்சி தருகிறார்.

முனியோதரம் பொங்கல் என்னும் பொங்கலே இக்கோயிலின் சிறப்புப் பிரசாதமாகும். திருக்கண்ணபுரத்தில் வாழ்ந்து வந்த முனையதரையர், பெருமாளின் சிறந்த பக்தர். பெருமாளுக்குப் படைக்காமல் எதுவும் உண்ணாதவர். ஒரு நாள் அவர் வெளியூர் சென்று விட்டு, இரவு திரும்பி வர நேரமாகிவிட்டது. எனவே வீட்டில் இருக்கும் பொங்கலை, அவரது மனைவியார் பெருமாளுக்கு மானசீகமாகப் படைத்து வழிபட்டதாகக் கூற, முனியதரையரும்

இசைவுற்று அப்பொங்கலை உண்டார். மறுநாள் காலை, திருக்கோயிலைத் திறக்கும் போது, பொங்கல் மணம் வருவதையும், பொங்கல் கோயிலிலிருந்து முனையதரையர் வீடு வரை சிதறி இருப்பதையும் கண்டு அனைவரும் திகைத்தனர். அடியார் வீட்டில் படைத்த எளிய பொங்கலைப் பெருமாள் ஏற்றுக் கொண்டதை அறிந்து மனம் நெகிழ்ந்தனர். இதை நினைவு கூறும் வகையில் இன்றளவும், அர்த்தசாமத்தில் பெருமாளுக்கு முனையதரன் பொங்கல் நைவேத்தியமாகப் படைக்கப்படுகின்றது. 5 ஆழாக்கு அரிசி, 3 ஆழாக்கு தோல் நீக்காத பாசிப்பருப்பு, 2 ஆழாக்கு நெய் சேர்த்து செய்யப்படும் இப்பொங்கல் மிகவும் ருசியாக இருக்கும். அரங்கன் கோவில் அரவணை, திருமறை லட்டு போல, முனியதரையர் பொங்கலும் தனிச்சிறப்பு வாய்ந்தது.

இத்திருத்தலத்திற்குத் திருவரங்கத்தைப் போன்று ஏழு மதில்கள் இருந்தன. சோழ மன்னன் ஒருவன் இம்மதில்களை இடித்துக் கருங்கற்களை, அருகில் உள்ள மற்றொரு கோவிலுக்கு எடுத்துச் சென்றான். இது கண்டு, மனம் வருந்திய இப்பெருமாளின் பரம பக்தர் அறையர் என்பவர், பெருமாள் இச்செயலைக் கண்டு கொள்ளாமல் உள்ளாரே, எனக் கோபம் கொண்டு, "பொருவரை முன்போர் தொலைத்த பொன்னாழி மற்றொரு கை என்றது பொய்த்ததோ" என்று தம் கையில் உள்ள தாளத்தைப் பெருமானின் மீது விட்டு எறிய, பெருமாள் தனது பிரயோகச் சக்கரத்தை ஏவி, அம்மன்னனைக் கொன்றார். இதனால் இப்பெருமாளின் நெற்றியில் தாளம் பட்டுப் புண்ணான "நெற்றி வடு" உள்ளதை இன்றும் காணலாம். தற்பொழுது ஒரு மதில் மட்டுமே உள்ளது.

திருவரங்கம் "மேலை வீடு" இத்தலம் "கீழை வீடு". மேலை வீட்டில், அதாவது மேற்கில் உள்ள திருவரங்கத்தில், எம்பெருமானின் கிடந்த கோலத்தைக் கண்டு இன்புற்ற விபீஷணர், அவரின் நடையழகையும் காண ஆசைப்பட்டார். "என் நடையழகைக் கீழை வீடான கண்ணபுரத்தில் காட்டுவோம்; அங்கு வந்து பாரும்" எனக் கூறிய பெருமாள். விபீஷணருக்குக் கண்ணபுரத்தில் நடையழகைக் காட்டினார். அமாவாசை தோறும், விபீஷணரின் தனிச் சன்னதிக்கு,

எம்பெருமான் கைத்தலத்தில் எழுந்தருளி தன் நடையழகை விபீஷணருக்குக் காட்டித் திரும்பும் நிகழ்ச்சி இத்தலத்தில் நடைபெறுகின்றது.

இத்தலத்தில் பெருமாள் மும்மூர்த்திகளாகக் காட்சி அருள்கிறார். வைகாசி பிரம்மோற்சவத்தின் 7ம் நாளில் "ஸ்திதி காத்தருளும்" நிலையில் மஹாவிஷ்ணுவாகவும், இரவு தர்ப்ப நாளங்களால் கட்டப்பட்டுத் தாமரைக்கு மத்தியில் படைப்பு நிலையில் பிரம்மாவாகவும், மறுநாள் விடியற்காலையில் முகூர்த்த நேரத்தில், அழிக்கும் ருத்ரனாகவும், அதாவது சிவனாகவும் காட்சியளிக்கிறார்.

95 அடி உயரமுள்ள ராஜகோபுரத்திற்கு முன்னால், ஒன்பது படித்துறைகள் கொண்ட "நித்யபுஷ்கரணி" பாற்கடல் போல் பரந்து விரிந்து அழகுடன் திகழ்கின்றது.

உபரிசரவசு மன்னர் நெய்தல் நிலத்தைச் சேர்ந்தவர். மீனவர் இனத்தைச் சேர்ந்த அவரது மகளான வலைநாச்சியார் என்னும் பத்மினி நாச்சியாரைத் தான் பெருமாள் திருமணம் செய்து கொண்டார். அதனால், அம்மீனவ குப்பத்து மக்களுக்கு, இவர் "மாப்பிள்ளை சாமி" ஆகின்றார். அதனால், ஆண்டுக்கொரு முறை, மாசி மாதம், பௌர்ணமி தினத்தன்று, நம் மாப்பிள்ளைப் பெருமாள், திருக்கண்ணபுரத்திலிருந்து புதுச்சேரி மாநிலத்திலுள்ள திருமலைராயன் பட்டினத்திற்கு, பிரவேசம் செய்கிறார். திருக்கண்ணபுரத்திலிருந்து திருமலைராயன்பட்டினத்திற்கு முன்கூட்டியே செல்லும் கருடாழ்வார், அங்கேயுள்ள நெற்கதிர்த் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளை மண்டபத்தில், சௌரிராஜப் பெருமாளுக்காகக் காத்திருப்பார். ஸ்ரீவரதராஜப் பெருமாளையும் அழைத்துக் கொண்டு, தீர்த்தவாரி நோக்கிச் செல்வார். வழிநெடுகிலும், பெருமாளுக்குப் பட்டுத் துணிகள் சார்த்தப்பட்டு, ஆராதனை செய்யப்படும். வெள்ளை மண்டபத்தை அடையும் பெருமாள், கருட சேவையுடன் இணைக்கப்பட்ட பவழக்கால் சப்பரத்தில், மீனவ அன்பர்கள் சுமந்து வர, கடற்கரைக்கு எழுந்தருளுவார். அக்கண்ணபுரத்து ஸ்ரீவெங்கடேஸ்வரப் பெருமாள், ஸ்ரீரகுநாதப் பெருமாள், ஸ்ரீவிழி வரதராஜப் பெருமாள், நிரவி

ஸ்ரீகரியமாணிக்கப் பெருமாள், காரை-கோவில்பத்து கோதண்டப் பெருமாள், காரைக்கால் ஸ்ரீநித்திய கல்யாணப் பெருமாள் ஆகியோர் புடைசூழக் கடற்கரைக்கு எழுந்தருளுவார். அன்று மாலை, 5 மணிக்கு, கடலில் தீர்த்தவாரி விமரிசையாக நடைபெறும். இங்கு நடக்கும் திருவீதி உலாவுக்குப் பிறகு, சௌரிராஜப் பெருமாள், மறுநாள் திருக்கண்ணபுரம் திரும்புகிறார்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா. மீனவன் "திருக்கண்ணபுரம்" குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. திருமகளைத் தன் திருமார்பில் வைத்திருக்கும் நீலமேகப் பெருமாள், மயக்கம் தரும் தேனைப் பருகிய பொன்வண்டுகள் இசைக்கின்ற திருக்கண்ணபுரத்தில் உறைந்திருக்கின்றான். தீமைகளை அகற்றக்கூடிய அப்பதியில் உறைந்திருப்பவனின் திருப்பாதங்களைப் பற்றிக் கொண்டால், பயமின்றி வாழலாம் எனக் கூறும் முதல் பாடல் :

*மாதேந்தும் திருமார்பன் மணிநீல மேகத்தான்*
*போதேந்து நறைபருகும் பொன்வண்டு பண்பாடத்*
*தீதகற்றும் பதியான திருக்கண்ண புரத்துறையும்*
*பாதங்கள் பற்றினார் பயமின்றி வாழுவரே.*

2. கண்ணபுர நாயகியின் மனம் முழுவதும் நிறைந்திருப்பவனை, குளிர்ச்சி தரும் துளவ மாலையைத் தரித்திருப்பவனை, இத்தலத்தில் உள்ள மக்களின் குறைகளை நீக்கும் திருமாலாய் நிற்பவனை, எண்ணித் தொழுபவர்கள் எண்ணியதை இத்தலத்தில் பெறுவர் என உறுதி கூறும் இரண்டாம் பாடல் :

*கண்ணபுர நாயகியாள் கருத்துள் நிறைந்தானைத்*
*தண்ணாரும் நறுந்துளவம் தரித்தானை இங்குறையும்*
*மண்ணவர்தம் மாலகற்ற மாலாகி நின்றவனை*
*எண்ணினார் எண்ணியதை இவண்பெறுவார் திண்ணமே.*

3. குற்றமற்ற தூய ஒளி போன்றவனை, மரகதப் பொன் போன்ற மேனி உடையவனை, குற்றங்களை அகற்றி நம்மை ஆட்கொண்ட நாயகனை, அறிவுடையார் வாழும் திருக்கண்ணபுரத்தில் வீற்றிருக்கும்

நாயகனை, வாசமான வகுள மாலையணிந்த வள்ளலை வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல் :

*மாசற்ற சோதியனை மரகதம்சேர் மேனியனை*
*ஆசகற்றி நம்குலத்தை ஆட்கொண்ட நாயகனைத்*
*தேசுடையார் வாழுதிருக் கண்ணபுர நாயகனை*
*வாசமலர் வகுளத்தார் வள்ளலைநாம் வணங்குதுமே.*

4. இத்தலத்தில், நாராயணனின் திருப்பாதங்களே நமைக் காக்கும் என்று நம்பி, ஆரணிய முனிவர்கள், வசு மன்னர்களின் போர் வீரர்களிடமிருந்து தம்மைக் காப்பதற்காகப் பெருமாளின் சேவடிகளைப் பணிந்துய்ந்தனர்.

ஒரு காலத்தில், மலைகளுக்கும் பறக்கும் சக்தி இருந்ததாம். அவை பறப்பது, மனிதர்களுக்கு இடையூறாக இருக்கும் என்பதால், அவற்றின் இறக்கைகளை வெட்டி வீழ்த்தினான் இந்திரன். ஒரே ஒரு மலை மட்டும், திருமலைராயன்பட்டினம் கடலுக்குள் மூழ்கி, மறைந்து தப்பித்தது.

அப்போது, அடிமைத்தனத்திலிருந்த தன் தாயை, பெருமாளின் துணையோடு மீட்டு விட்டோம் என்ற கர்வத்தில், இறக்கைகளை விரித்து, அவ்விறக்கைகளுக்குக் கீழிருக்கும் பூமிப்பகுதி முழுவதும் இருள் சூழுமாறு, இறுமாப்புடன் பறந்து கொண்டிருந்தான் கருடன். இத்தலத்திற்கும் அவ்வாறே பறந்து வந்த போது, சௌரிராஜப் பெருமாளின் துவாரபாலகர்கள், இத்தலத்தின் மீது பறக்க வேண்டாம் எனத் தடுத்தும், மீறிப் பறந்தான் கருடன். ஆத்திரமுற்ற துவாரபாலகர்கள், பூமியில் தெரிந்த கருடனது இறக்கைகளின் நிழலைத் தொட்டு இழுத்துப் பிய்த்தெடுத்தனர். இதில் நிலைகுலைந்து கருடன், திருமலைராயன்பட்டினக் கடலுக்குள், இந்திரனுக்குப் பயந்து பதுங்கியிருந்த மலையில் வீழ்ந்தான். அம்மலையின் மீதமர்ந்தபடியே, மீண்டும் தன்கு இறக்கைகளை வழங்கும்படி, பெருமாளை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். தவத்தால் மகிழ்ந்த பெருமாள், அவனுக்குப் பறக்கும் வலிமையைத் தந்தருளினார். அதனால்தான், திருக்கண்ணபுரத்தில், கருவறையில் திருமாலுக்கு அருகிலேயே காட்சி தருகிறார் கருடாழ்வார். கருடன் அமர்ந்து தவம் செய்த மலை,

"கருடபர்வதம்" ஆனது. இந்நிகழ்ச்சி மாசிமக நன்னாளில் நடைபெற்றது. எனவே, மாசிமகத் திருவிழாவின் போது, கிழக்குக் கடலில் உள்ள கருடபர்வதத்திற்குக் காட்சி தரும் வகையில், திருமலைராயன்பட்டினக் கடற்கரையில் பெருமாள் எழுந்தருள்கின்றார்.

இவ்வாறு ஆரணிய முனிவர்களும், கருடனும் பணிந்துய்ந்த, திருக்கண்ணபுரப் பெருமானின் அழகு பொருந்திய சேவடிகளை நாமும் பணிவோம் எனக் கூறும் நான்காம் பாடல் :

*நாரணன்தன் சேவடியே நலங்காக்கும் என்றுசொலி*
*ஆரணிய முனிவர்களும் ஆற்றலுள்ள புள்வேந்தும்*
*சீரணியும் திருக்கண்ண புரச்செல்வர் சேவடியைப்*
*பாரறியப் பணிந்துய்ந்தார் நாமுமினிப் பணிகுவமே.*

*"சரணமாகும் தனதாள் அடைந்தார்க் கெல்லாம்*
*மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்*
*அரணமைந்த மதிள் சூழ்திருக் கண்ணபுரத்*
*தரணி யாளன் தனதன்பர்க்கு அன்பாகுமே"*

எம்பெருமானிடம் சரணாகதி அடைபவர்க்கு வைகுந்தபதி அளிப்பான் என்று நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்திருந்தாலும், திருக்கண்ணபுரத்திலும், அதனைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் உள்ள பக்தர்கள், தங்களின் வயது முதிர்ந்த காலத்தில், திருக்கண்ணபுரத்திற்கு வந்து தங்கி, நித்ய புஷ்கரணியில் நீராடி, சௌரிராஜனை காலையும் மாலையும் தொழுது, நமக்கு வைகுந்தம் நிச்சயம் என்று தங்கள் வாழ்நாளைக் கழித்து வருகின்றனர். திருக்கண்ணபுரம் பூலோகத்து விண்ணகரம் என்பதால், இத்திருக்கோவிலில் பரமபத வாசல் கிடையாது. இத்திருக்கோவிலே பரமபதம் ஆகும். அத்தகைய திருத்தலத்தைப் பணிந்து உய்யச் சொல்லும் ஐந்தாம் பாடல் :

5. *கண்ணபுரம் வாழ்மாலைக் கருத்துள்ளே வைத்தவர்கள்*
*எண்ணியதைப் பெற்றுய்வார் இணையடியாம் கமலங்கள்*
*நண்ணியே தொழுதிடுவோர் நலம்பெறுவார் என்றிங்கே*
*பண்ணியலும் தமிழ்சொல்லும் பக்தர்களே பணிந்துய்மின்.*

திருமங்கையாழ்வாருக்குத் திருமந்திர உபதேசம் செய்யப்பட்டது இத்தலத்தில் தான். திருமங்கையாழ்வார் 105 பாசுரங்கள் பாடியுள்ளார். நம்மாழ்வார் ஒரு பதிகம் பாடினார். பெரியாழ்வார் பல்லாண்டு பாடினார். ஆண்டாள், காட்டில் வேங்கடம் கண்ணபுரநகர் எனப் பாடியுள்ளார். எல்லாவற்றிற்கும் மேலே, குலசேகராழ்வார், பதினொரு பாசுரங்களால் இப்பெருமாளுக்கு ஒரு தாலாட்டே பாடியுள்ளார்.

நிலைத்த புகழையுடைய கௌசல்யாதேவியின் அழகிய வயிற்றில் பிள்ளையாக அவதரித்தவனே! தென்திசையிலுள்ள இலங்கை அரசனான இராவணனின் பத்துத் தலைகளும் சிதறி விழும்படி பாணம் தொடுத்தவனே! செவ்விய தங்கத்திலே செய்யப்பட்ட அழிவற்ற, அழகான பெரிய மதிலால் நான்கு புறமும் சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தில் வீற்றிருக்கும் என் கண்ணின் கருமணி போன்ற இராகவனே ! எனது இனிய அமுதமே ! உன்னைத் தாலாட்டுகின்றேன் எனக் கூறும் குலசேகர ஆழ்வாரின் தாலாட்டுப் பாடல் :

*மன்னுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே !*
*தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்! செம்பொன்சேர்*
*கன்னிநன் மாமதில்புடை சூழ்கண்ணபுரத்தென் கருமணியே*
*என்னுடைய இன்னமுதே! இராகவனே ! தாலேலோ !*

(தொடரும்...)

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 14

தமிழாகரர் தெ.முருகசாமி
(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

பொதுவாக அப்பன், அச்சன் என்ற சொற்கள் தலைவன் என்ற பொருளில் குறிப்பதை மலைநாடான கேரளாவிலே மிகுதியாகக் காணலாம். அப்பன் நீ அம்மை நீ என அப்பரும் அப்பா நான் கேட்டருள் புரிதல் வேண்டும் என வடலூர் இராமலிங்கரும் இறைவனை அப்பன் என்றாலும் பெரும்பாலும் மலைநாட்டுத் தலத்தின் மூர்த்திக்கே அதாவது மூலவருக்கே அப்பன் என்ற சொல்லைச் சேர்த்துக் கூறிச் சேவிக்கும் வழக்கமானது தனிச்சிறப்பானதாகும்.

அந்தப் பெயர்ச் சிறப்புடன்தான் உலகெங்கிலும் உள்ள பக்தர்கள் இந்தப் பனிப் பொழிவுமிக்க காலத்தில் மிகுதியாகவும் மற்ற மற்ற மாதத் தொடக்கத்திலும் ஐயப்பனைப் போற்றிப் பரவுவதைப் பார்க்கின்றோம். அந்த வகையில் 67ஆம் திருத்தலக் காட்கரை அப்பனைச் சேவித்த பிறகு 71ஆம் தலத்து இமயவரம்பனைச் சேவிக்கின்றோம். இன்னும் 73ஆம் தலத்தும் திருக்குறளப்பனையும், சேவிக்க இருக்கின்றோம்.

கொல்லம் - எர்ணாகுளம் மார்க்கத்தில் உள்ளது, திருச்செங்குன்றூர் என்னும் திருச்சிற்றாறு. தாயார் செங்கமல வல்லியுடன் மேற்கு நோக்கி நின்ற கோலத்தில சேவை சாதிக்கின்றார் இமையவரப்பன்.

ஆதிபரம் பொருள் வைகுந்தத்தில் தேவாதி தேவர்களுக்குப் பரமபிதாவாக இருந்தாலும் இம்மண்ணுலகத்திற்கும் அப்பனாக உள்ளதால் அப்பெயரே அமைந்தது என மீனவர் மூலத்தான மூர்த்தியின் பெயர் விளக்கத்தைக் கேட்டுச் சேவிக்கும் நாம்,

*தருமம் தவறாதான் தருமன்எனும் பாண்டவர்கோன்*
*குருதுரோணர் இறக்கவெனக் கூறியபொய் அதனாலே*
*வருபாவம் தீர்க்க என வந்துபணி செய் குன்றூர்*
*ஒருமுறை பணிந்துய்மின் -*

என அவர் பாடிய பாமாலையின் கதையையும் கேட்டு இரட்டிப்பு மகிழ்ச்சியில் செங்குன்றூர் அப்பனைச் சேவிக்கின்றோம் என நினைத்தோம்.

ஆம்! மீனவர் கூறியபடி இச்செங்குன்றூர் அப்பன் தருமரின் பாவத்தைப் போக்கிய உண்மையை மீனவரிடமே ஆர்வமுடன் கேட்டறிகிறோம். பாரதப் போரின் 15ஆம் நாளில் தருமர், “அசுவத்தாமா அதாகுஞ்சரம்” எனக் கூறியதைக் கேட்ட திட்டத்துய்ம்மனால் அம்பெய்து மாண்டவர் துரோணராவார்,

பொய்சொல்லா தருமர் சூழ்ச்சியால் பொய் சொல்ல நேர்ந்ததால், பாவம் சேர்ந்தது. யானை ஒன்றுக்கு அசுவத்தாமம் என்ற பெயர். அது போரில் அழிந்துபட்டதையே தருமர் கூறினார். அச்சொல் உண்மையான அசுவத்தாமனாம் வீரன் இறந்ததாய்க் கூறியதாக

நினைத்துக் கொண்டு திட்டத்துய்மன் ஆவேசப்பட்டு துரோணரைக் கொன்று விட்டான்.

இக்கொலைக்குத் தருமர் கூறியதே காரணமாக இருந்துவிட்டதால் தருமரைப் பாவம் பற்றிக் கொண்டதற்காக இச்செங்குன்றூர் அப்பனால் அப்பாவம் தீர்ந்தது என்றார் மீனவர்.

மீனவர் சொன்னதைப் போல் இல்லாமல் நம்மாழ்வார் செய்த மங்களாசாசனத்தில் கூறும் பாகவதக் கதையான கம்சனைப் பற்றியதில் கம்சன் கண்ணனைக் கொல்லச் செய்த முயற்சிகளில் யானையை ஏவிக் கொல்லச் செய்த போது குழந்தை கண்ணன் அந்த மாய யானையைக் கொன்ற வீரத்தை இச்செங்குன்றூர் அப்பன் மீது ஏற்றி வழிபட்டார் என்பது தெரிகிறது.

எது எப்படியாயினும் செங்குன்றூர் அப்பன் பாவம் தீர்ப்பான் எனத் தெரிவதால் "செங்குன்றூர் ஒருமுறை நீர்பணிந்துய்ய உத்தமனார் வந்துய்மின்" என மீனவர் பாடியபடி வந்து சேவித்ததைப் பாக்கியமாக நினைத்தபடித் திருப்புலியூர் என்ற தலத்தைச் சேவிக்கச் செல்கின்றோம்.

இத்திருப்புலியூர்-மலை நாட்டுப் பிரிவில் குட்டநாடு என்ற தன் இடத்ததாகும். பொற்கொடி நாச்சியார் என்னும் தாயாருடன் மாயப்பிரான் என்னும் திருநாமத்தோடு சேவை சாதிக்கும் பரந்தாமன் கிழக்கு நோக்கிய கோலத்தில் நின்றுள்ளாரை மீனவர் காட்டக் காணும் நாம், இங்குள்ள பரந்தாமனுக்கு மாயப்பிரான் எனப் பெயர் வரக் காரணம் என்ன என வினவியதும் அவர் பொதுவாக மாயம் பல செய்யும் தன்மையைக் கூறி நமது மயக்கத்தைப் போக்கியதும் இத்திருத்தலத்திற்குப் புலியூர் எனப் பெயர் வரக் காரணம் யாது எனக் கேட்க மீனவரும், "ஏழு முனிவர் தவம் கெடுத்தார் இடர் நீக்க இந்திரனை, உழுவை யாய் வரச் செய்த" மாயம் பற்றிக் கூறக் கேட்டுப் புலியூரை வணங்கினோம்.

இருடிகள் (ரிஷிகள்) பரம்பரை பலவகைப்படும். அவர்களுள் குபேரனுக்கு ஆசிரியர்களாக இருந்த ஏழுபேர் ஒரு வகையினர். அத்ரி, வசிட்டர், கச்சியபர், கௌதமர், பரத்துவாசர், விசுவாமித்ரர், ஜமதக்னி

இவர்களின் தவத்தை அசுரர்கள் கலைக்க முற்பட்ட போது பரந்தாமன் அறிந்து தேவேந்திரனைப் புலியாய்ப் போகச் செய்து விரட்டி அருள் செய்தார் என்பது ஒரு புராண வரலாறாகும்.

ஆக "புலியூரை நாம் பணிந்தோம் ஆமாகில் என்ன குறை" என மீனவர் பாடக் கேட்ட வண்ணம் ஆரம் முளா என்னும் திருவாறன் விளை என்ற திவ்விய தேசம் செல்கின்றோம். தாமரை மீது வீற்றிருக்கும் பத்மாசனி நாச்சியாருடன் பரந்தாமன் குறளப்பனாய், கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிப்பதைக் கண்டு வணங்குகிறோம்.

முன்பு திரிவிக்கிரமனாய் இருந்தானின் செருக்கடக்க ஓங்கி உலகளந்த உத்தமனாக வாமன அவதாரம் கொண்ட பரந்தாமனே ஈண்டு ஆரம்முளாவில் சேவை சாதிப்பதாக மீனவர் விளக்கினார்.

முந்திய திருப்புலியூரில் திருமங்கையாழ்வார் தம் சிறிய திருமடலில் மங்களா சாசனம் செய்தது போல் நம்மாழ்வாரும் நாயக நாயகி பாவனையில் மங்களா சாசனம் செய்து மாயப் பிரானாம் பரந்தாமனைச் சேவித்தார். அவ்வாறே நம்மாழ்வார் ஆறன் விளையில் உள்ள குறளப்பனைச் சேவிக்க ஆசைப்பட்டு மங்களா சாசனத்தால் அடிமை செய்யக் கருதினார்.

இந்த இரு திவ்ய தேசங்களின் பாசுரங்களில் (புலியூர் - ஆறன்விளை) நம்மாழ்வாரால் சுட்டப்படாத புராணக் கருத்தான கதையை மினவர் தம் பாமாலையில் பாடியுள்ளது சிந்தைக்கு விருந்தாக உள்ளது.

திருப்புலியூரில் ஏழு முனிவர்களின் (சப்தரிஷி) இடர்களைந்ததாகக் கூறியது போல இந்த ஆறன்விளையில் பாரதக் கதை ஒன்றை நினைவு கூர்கிறார் மீனவர். மகாபாரதப் போரில் கர்ணனுக்கும் அருச்சுனனுக்குந்தான் நேரிடைப் போர் நடந்தது. அருச்சுனனின் அம்பால் கர்ணன் செயலற்று வீழ்ந்தான். பங்காளியாக இருந்தாலும் பகைமை காரணமாகச் செய்த பாவம் அருச்சுனனுக்கு அமைந்தது. அந்தப் பாவத்தைத் தீர்த்துக் கொள்ள அருச்சுனன் இந்த ஆறன் விளைக்கு வந்து பலன் பெற்றான் என்கிறார் மீனவர்.

*அங்கர்கோன் தனைப்போரில் அட்டபழி அகலஎனத்*
*துங்கவாம் பரித்தேரில் துலங்குபோர் அருச்சுனனார்*

***இங்குவந்து வணங்கியே ஏற்றமிகப் பெற்றபதி***
***மங்கலங்கள் தருவதனால் மனமுருகி வணங்குமினே.***

அங்கர்கோன் என்பான் கர்ணன், அங்க தேசத்திற்கு அதிபதியாக இருந்தவன், போரில் கர்ணனை அழிப்பதாகவே அருச்சுனன் சூளுரைத்தான். அதனால்தான் மீனவர் "அட்டபழி அகல" என்றார்.

சகோதர வாஞ்சையில் போர் தொடர்பாகப் பழியைத் தேடிக் கொண்டதாக மூவரைக் கூறுவர், சுக்ரீவன் அண்ணன் வாலியைக் காட்டிக் கொடுத்தான், வீடணன் இராவணனைக் காட்டிக் கொடுத்தான், அவ்வாறே அருச்சுனன் கர்ணனை எதிர்த்தான், இந்தப் பழியைப் பழம்பாடல் ஒன்று கூறும் போது,

***செஞ்சுடரோன் மைந்தனையும் தென்னிலங்கை வேந்தனையும்***
***பஞ்சவரில் பார்த்தனையும் பாராதே!***

என்பதாகத் தனிப்பாடல் கூறுவதால் ஆறன்விளை திருத்தலம் பாவம் போக்கும் தலம் என்ற உண்மையைக் கேட்டறிந்த நினைப்போடே மலைநாட்டின் அடுத்த தலமான (74) திருவண்வண்டூர் எனும் பதிக்குச் செல்கின்றோம்.

பரந்தாமனுக்கே உரிய ஆதிசேடப்படுக்கையில் பாம்பணை அப்பனாக மேற்கு நோக்கிய சந்நிதியாய் நின்ற திருக்கோலத்தில் கமலவல்லி நாச்சியாருடன் கமலநாதன் சேவை சாதிப்பதைக் கண்டு வணங்குகிறோம். நல்ல இயற்கை வளம் கொழிக்கும் நீர் நிலை சூழ்ந்த வண்டூரில் பரந்தாமன் "சடகோபன் தீந்தமிழ்த்தேன் செவி மாந்திக்" கிடக்கின்றானாம் என்கிறார் மீனவர். மங்களாசாசனத்தில் நம்மாழ்வார் பறவைகளைத் தூதுவிட்டுப பரந்தாமனை ஆராதிக்கின்றார்.

இந்த வண்டூர் வேதியர்கள் ஞானத்தை உபதேசித்தபடி இருப்பதால் மீனவர் பாமாலையில் "வேதப் பொருள் விளங்க உயர் வேதியர்கள் இசைபாடக் கேட்டும்" பாம்பணையில் பரந்தாமன் துயில்வதாகப் பாடுகிறார். இப்படி யோகத் துயில் கொள்ளும் பரந்தாமன், நான்முகனால் சாபம் பெற்ற நாரதருக்கு வரம் அளித்துக் காத்தார் என்கிறார் மீனவர். மேலும் "நல்லோராம் பாண்டவரில் நகுலர்" பணி செய்துபேறு பெற்றதாகவும் கூறுகிறார்.

நம்மாழ்வாரின் மங்களாசாசனத்தில் குறிக்காத குறிப்பை மீனவர் வண்டூரில் வாழ் மக்களின் வழிவழியான அருளாளர்களின் வாழையடி வாழையான வாழ்க்கைக் குறிப்பைக் கேட்டறிந்த அளவில் பாமாலையில் பதிவுகளைச் செய்யுங்கால், நாராயணனிடம் வரம் பெற்ற நாரதர் "நாரதீயம்" என்னும் ஒரு நூலைச் செய்த சிறப்புக்குரியது இவ்வண்டூர் என்கிறார். இஃதோர் வரலாற்றுப் பதிவாகும்.

ஆக மனித குலம் உய்வதற்கு உபதேசம் வழங்கவல்ல வண்டூர் பரந்தாமனை வணங்கிய நம்மை உலகெலாம் போற்றும் திருவனந்தபுரம் என்னும் திவ்விய தேசத்திற்கு அழைத்துச் செல்லச் செல்லும் நாமும் ஸ்ரீ அரிலட்சுமி உடனாய அனந்தபத்ம நாதனைச் சேவித்து அருள் பெறுவதை அடுத்துச் சிந்திப்போமாக!

***(தொடரும்...)***

## திருக்குறள் தெளிவுரை

**(ம. கார்மேகம்)**

### மன்னரைச் சேர்ந்து ஒழுகல்

(மன்னரோடு சேர்ந்து அமைச்சர் செயலாற்றுதல் தன்மை)

**1. அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க**
**இகல்வேந்தர் சேர்ந்தொழுகு வார்.**

அகலாது - தீயை விட்டு நீங்காமலும்; அணுகாது - தீயை மிகவும் நெருங்காமலும் ; தீக்காய்வார் போல்க - குளிருக்காகத் தீயிடத்தில் நிற்பவர் போல் நிற்க ; இகல்வேந்தர் - மாறுபடுதல் கொண்ட மன்னரை; சேர்ந்தொழுகுவார் - சேர்ந்து செயலாற்றும் நிலை உள்ள அமைச்சர்.

மாறுபடுதல் கொண்ட மன்னரைச் சேர்ந்து செயலாற்றும் நிலை உள்ள அமைச்சர் தீயை விட்டு நீங்காமலும், தீயை மிகவும் நெருங்காமலும் குளிருக்காகத் தீயிடத்தில் நிற்பவர் போல் நிற்க வேண்டும்.

அகலாது , அணுகாது - எதிர்மறை வினை எச்சங்கள் ; போல்க - வியங்கோள்

**2. மன்னர் விழைப விழையாமை மன்னரான்**
**மன்னிய ஆக்கம் தரும்.**

மன்னர் விழைப- மன்னர் விரும்புவனவற்றை ; விழையாமை - தாம் விரும்பாமல் இருத்தல் ; மன்னரால் - மன்னரின் துணையால் ; மன்னிய - நிலையான ; ஆக்கம் தரும் - செல்வத்தைத் தரும்.

மன்னர் விரும்புவனவற்றை அமைச்சன் விரும்பாமல் இருத்தல் மன்னரின் துணையால் நிலையான செல்வத்தைத் தரும்.

விழையாமை - எதிர்மறைத் தொழிற்பெயர்

**3.போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்**
**தேற்றுதல் யார்க்கும் அரிது.**

போற்றின் - காக்க நினைத்தால் ; அரியவை போற்றல் - அரிய பிழைகள் வராமல் காக்க வேண்டும் ; கடுத்தபின் - மன்னன் ஐயம் கொண்டு விட்டால் ; தேற்றுதல் - மன்னனுக்குத் தெளிவுபடுத்துவது ; யார்க்கும் அரிது - எவருக்கும் அரிதாகும்.

அமைச்சர் தம்மைக் காக்க நினைத்தால் அரிய பிழைகள் வராமல் காக்க வேண்டும்; மன்னன் ஐயம் கொண்டு விட்டால் மன்னனுக்குத் தெளிவுபடுத்துவது எவருக்கும் அரிதாகும்.

போற்றல் - வியங்கோள் ; தேற்றுதல் - தொழிற்பெயர்.

**4.செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்**
**ஆன்ற பெரியார் அகத்து.**

செவிச்சொல்லும் - தம் செவியில் பிறர் சொல்லுதலும் ; சேர்ந்த நகையும் - பிறர் முகம் பார்த்துச் சிரித்தலும் ; அவித்து ஒழுகல் - அடக்கி நடத்தல் வேண்டும் ; ஆன்ற பெரியார் அகத்து - நிறைந்த பெரியவராகிய மன்னர் பக்கத்தில் உள்ள போது;

நிறைந்த பெரியவராகிய மன்னர் பக்கத்தில் உள்ள போது அமைச்சர் செவியில் பிறர் சொல்லுதலும் பிறர் முகம் பார்த்துச் சிரித்தலும் அடக்கி நடத்தல் வேண்டும்.

**5.எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை**
**விட்டக்கால் கேட்க மறை.**

எப்பொருளும் ஓரார் - எந்தச் செய்தியையும் கேட்காமல் ; தொடரார் - அது என்ன என்று அறிய முற்படாமல் ; மற்று அப்பொருளை - ஆயின் அச்செய்தியை ; விட்டக்கால் - ஒருவன் தானாகச் சொல்லும்போது ;

கேட்க மறை - மன்னன் உரையாடும் மறைவான செய்தியைக் கேட்க வேண்டும்.

மன்னன் உரையாடும் மறைவான செய்தியை அவன் தானாகச் சொல்லும் போது கேட்க வேண்டும் ; அதை விட்டு அதனை அறிவதற்காகக் கேட்கக் கூடாது ; அதனை அறிய முற்படவும் கூடாது.

**6. குறிப்பு அறிந்து காலம் கருதி வெறுப்பில்**
**வேண்டுப வேட்பச் சொலல்.**

குறிப்பு அறிந்து - மன்னனது குறிப்பினை அறிந்து ; காலம் கருதி - ஏற்ற காலத்தை எண்ணிப் பார்த்து ; வெறுப்பில் - வெறுப்பு இல்லாத ; வேண்டுப - மன்னனுக்கு வேண்டுவனவற்றை ; வேட்பச் சொலல் - அவன் விரும்புமாறு சொல்ல வேண்டும்.

அமைச்சன் சொல்ல நினைத்ததை மன்னனது குறிப்பினை அறிந்து ஏற்ற காலத்தை எண்ணிப் பார்த்து வெறுப்பு இல்லாததாக மன்னனுக்கு வேண்டுவனவற்றை அவன் விரும்புமாறு சொல்ல வேண்டும்.

சொலல் - வியங்கோள்

**7. வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்**
**கேட்பினும் சொல்லா விடல்.**

வேட்பன சொல்லி - மன்னன் விரும்புமாறு உள்ளவற்றைச் சொல்லி; வினையில - பயனில்லாத வினைகளை ; எஞ்ஞான்றும் - எப்பொழுதும் ; கேட்பினும் - மன்னன் கேட்டாலும் ; சொல்லா விடல் - சொல்லாமல் விட்டுவிட வேண்டும்.

மன்னன் விரும்புமாறு உள்ள பயனுள்ள வினைகளைச் சொல்லி மன்னன் கேட்டாலும் பயனில்லாத வினைகளை எப்பொழுதும் சொல்லாமல் விட்டு விட வேண்டும்.

கேட்பினும் - உம் எச்ச உம்மை ; விடல் - வியங்கோள்

**8. இளையர் இனமுறையர் என்றுஇகழார் நின்ற**
**ஒளியோடு ஒழுகப் படும்.**

இளையர் - மன்னன் தன்னைவிட இளையர் என்றும் ; இனமுறையர் என்று - தனக்கு இன்ன உறவுமுறை உடையவர்

என்றும்; இகழார் - மன்னனை இகழ்வாக எண்ணாமல் ; நின்ற ஒளியோடு - மன்னனோடு பொருந்திய புகழோடு ; ஒழுகப்படும் - எண்ணி ஒழுகுதல் வேண்டும்.

மன்னன் தன்னைவிட இளையர் என்றும் தனக்கு இன்ன உறவு முறை உடையவர் என்றும் இகழ்வாக எண்ணாமல் மன்னனோடு பொருந்திய புகழோடு எண்ணி ஒழுகுதல் வேண்டும்.

9. கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்குஅற்ற காட்சி யவர்.

கொளப்பட்டேம் - மன்னனால் ஏற்றுக்கொள்ளப்பட்டோம் ; என்று எண்ணி - என்று நினைத்து ; கொள்ளாத - மன்னன் மனம் ஏற்றுக் கொள்ளாதவற்றை ; செய்யார் - செய்ய மாட்டார் ; துளக்கு அற்ற - நிலைத்த ; காட்சியவர் - அறிவுத் தெளிவினை உடையவர்.

மன்னனால் ஏற்றுக் கொள்ளப்பட்டோம் என்று நினைத்து மன்னனின் மனம் ஏற்றுக் கொள்ளாதவற்றை நிலைத்த அறிவுத் தெளிவு உடையவர் செய்ய மாட்டார்.

10. பழையம் எனக்கருதிப் பண்பு அல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.

பழையம் - மன்னனுக்குப் பழையவன் ; எனக் கருதி - என்று நினைத்து ; பண்பு அல்ல செய்யும் - இயல்பில்லாதவற்றைச் செய்கின்ற ; கெழுதகைமை - உரிமை ; கேடு தரும் - அழிவைத் தரும்.

மன்னனுக்குப் பழையவன் நான் என்று நினைத்து இயல்பு அல்லாதவற்றைச் செய்யும் அமைச்சனின் உரிமை அவனுக்கு அழிவைத் தரும்.

## குறிப்பறிதல்
### (மன்னனின் மனக்குறிப்பை அறிதல்)

1. கூறாமை நோக்கிக் குறிப்பு அறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்கு அணி.

கூறாமை நோக்கி - மன்னன் எண்ணிய செயலைக் கூறாமலேயே அவனை நோக்கி ; குறிப்பு அறிவான் - அவனது குறிப்பினை அறிந்து செயல்படும் அமைச்சன்; எஞ்ஞான்றும் - எக்காலத்தும் ; மாறாநீர்

வையக்கு - மாற்றமில்லாத நீர் நிறைந்த கடல் சூழ்ந்த உலகத்தவர்க்கு; அணி - அணிகலன் போன்றவன்.

மன்னன் எண்ணிய செயலை அவன் கூறாமலேயே அவனை நோக்கி அவனது குறிப்பினை அறிந்து செயல்படும் அமைச்சன் எக்காலத்தும் மாற்றமில்லாத நீர்நிறைந்த கடல்சூழ்ந்த உலகத்தவர்க்கு அணிகலன் போன்றவன்.

வையம் - ஆகுபெயர்

**2. ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்.**

ஐயப்படாஅது - ஐயம் கொள்ளாமல்; அகத்தது - மன்னன் உள்ளத்தில் உள்ளதை ; உணர்வானை - உணர்ந்து செயல்படுபவனை ; தெய்வத்தோடு ஒப்பக் கொளல் - தெய்வத்தோடு ஒப்புமையாகக் கொள்ள வேண்டும்.

மன்னன் உள்ளத்தில் உள்ளதை ஐயம் கொள்ளாமல் உணர்ந்து செயல்படுபவனைத் தெய்வத்தோடு ஒப்புமையாகக் கொள்ள வேண்டும்.

படாஅது - இசைநிறை அளபெடை

**3. குறிப்பின் குறிப்புஉணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.**

குறிப்பின் - தமது உள்ளக் குறிப்பினால்; குறிப்பு உணர்வாரை - பிறரது குறிப்பினை உணர்ந்து கொள்ளும் தன்மை உள்ளவரை ; உறுப்பினுள் - மன்னன் தனது உறுப்புகளுள்; யாது கொடுத்தும் - எதனை ஈடாகக் கொடுத்தும் ; கொளல் - துணையாகக் கொள்ள வேண்டும்.

தமது உள்ளக் குறிப்பினால் பிறரது குறிப்பினை அறிந்து கொள்ளும் தன்மை உள்ளவரை மன்னன் எதனை ஈடாகக் கொடுத்தும் தனது உறுப்புகளுள் துணையாகக் கொள்ள வேண்டும்.

**4. குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை
உறுப்புஓர் அனையரால் வேறு.**

குறித்தது - ஒருவன் எண்ணியதனை ; கூறாமைக் கொள்வாரோடு

– சொல்லாமமேயே அறிந்து கொள்ள வல்லவரோடு; ஏனை – மற்றவர்; உறுப்புஓர் அனையரால் – உறுப்புகளைக் கொண்டிருப்பதால் ஒப்பர்; வேறு – ஆனால் வேறாவர்.

ஒருவன் எண்ணியதனைச் சொல்லாமலேயே அறிந்து கொள்ள வல்லவரோடு மற்றவர்கள் உறுப்புகளைக் கொண்டிருப்பதால் ஒப்பாவர்; ஆனால் அறிவால் வேறுபட்டவர்.

**5. குறிப்பின் குறிப்புஉணரா ஆயின் உறுப்பினுள்**
**என்ன பயத்தவோ கண்.**

குறிப்பின் – குறிப்பினால்; குறிப்பு உணரா ஆயின் – பிறரது குறிப்பினை உணரமாட்டா என்றால்; உறுப்பினுள் – உடல் உறுப்புகளில்; என்ன பயத்தவோ கண் – என்ன பயனைத் தருகின்றன கண்கள்.

குறிப்பினால் பிறரது குறிப்பினை உணராத கண்கள் உடல் உறுப்புகளில் என்ன பயனைத் தருகின்றன ? குறிப்புணராத கண்களால் பயனில்லை.

உணரா – எதிர்மறை வினைமுற்று

**6. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்.**

அடுத்தது – தன்னை அடுத்துள்ள பொருளின் ; காட்டும் பளிங்குபோல் – தன்மையைக் காட்டும் பளிங்குபோல ; நெஞ்சம் கடுத்தது – மனதில் நிறைந்திருப்பதனை ; காட்டும் முகம் – முகம் காட்டிவிடும்.

பளிங்கு தன்னை அடுத்துள்ள பொருளின் தன்மையைக் காட்டும் ; அதுபோல் ஒருவனது முகம் அவனது மனதில் நிறைந்திருப்பதனைக் காட்டி விடும்.

**7. முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்**
**காயினும் தான்முந் துறும்.**

முகத்தின் – முகத்தைப் போல ; முதுக்குறைந்தது உண்டோ – அறிவுள்ளது உண்டோ ; உவப்பினும் – மகிழ்ந்தாலும்; காயினும் – சினந்தாலும் ; தான்முந்துறும் – தான் முந்திக்கொண்டு காட்டும்.

உயிரானது மகிழ்ந்தாலும் சினந்தாலும் தான் முந்திக் கொண்டு அவற்றைக் காட்டும் முகத்தைப் போல அறிவுள்ளது வேறு உண்டோ ? இல்லை.

இன் - உவம உருபு

**8. முகம் நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி**
**உற்றது உணர்வார்ப் பெறின்.**

முகம்நோக்கி நிற்க - ஒருவருடைய முகத்தை நோக்கி நிற்கும்போது; அமையும் - தணியும் ; அகம்நோக்கி - அவரது உள்ளத்தைக் குறிப்பால் நோக்கி ; உற்றது - அவருக்கு உற்றதை ; உணர்வார்ப் பெறின் - உணர்ந்து கொள்பவரைப் பெற்றால்.

ஒருவரது உள்ளத்தைக் குறிப்பால் நோக்கி அவருக்கு உற்றதை உணர்ந்து கொள்பவரைப் பெற்றால் அவருடைய முகத்தை நோக்கி நிற்கும்போது உற்றது தணியும்.

நிற்க - வினை எச்சம்.

**9. பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்**
**வகைமை உணர்வார்ப் பெறின்**

பகைமையும் - மனதில் உள்ள பகைமையையும்; கேண்மையும் - நட்பினையும் ; கண் உரைக்கும் - மன்னனின் குறிப்பு உரைத்து விடும் ; கண்ணின் வகைமை - பார்வையின் வகைகளை ; உணர்வார்ப் பெறின் - உணர்ந்து கொள்ளும் வல்லவரைப் பெற்றால்.

மன்னனின் பார்வையின் வகைகளை உணர்ந்து கொள்ளும் வல்லவரைப் பெற்றால் மனத்தில் உள்ள பகைமையையும் நட்பினையும் அவருடைய (கண்களே) குறிப்பே உரைத்துவிடும்.

**10. நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்**
**கண்அல்லது இல்லை பிற.**

நுண்ணியம் என்பார் - நுட்பமான அறிவு உடையோம் என்று சொல்பவர்கள் ; அளக்குங்கோல் - மற்றவர் கருத்தினை அளிக்கின்ற கருவி ; காணுங்கால் - எண்ணிப் பார்த்தால்; கண் அல்லது - கண்ணைத் தவிர ; இல்லை பிற - வேறு இல்லை.

எண்ணிப்பார்த்தால் நுட்பமான அறிவு உடையோம் என்று சொல்பவர்கள் மற்றவர் கருத்தினை அளக்கும் கருவி கண்ணைத் தவிர வேறு இல்லை.

*(தொடரும்...)*

## நற்றவக் கொடியனார்
### (ம.கார்மேகம்)

சுந்தரரால் கடவூர்க் கலியன் என்று பாராட்டப் பெறுபவர் குங்குலியக் கலய நாயனார். தாலியை நெல்கொள என்று வாங்கிக் கொண்டு சங்கையில் குங்குலியத்தால் சார்ந்த செல்வர் என்று திருத்தொண்ட புராணசாரம் கூறுகிறது. திருத்தொண்டர் திருவந்தாதி, காதலி தாலி கொடுத்து ஆய்ந்தநல் குங்குலியம் கொண்டு அரனுக்கு இட்ட கலயன் என்கிறது. இந்தக் கலயனார் வாழ்ந்த ஊர் திருக்கடவூர். அருமறை முந்நூல் மார்பின் அந்தணர்; செய்பணி குறைவு படாமல் நிகழ்த்தினார்; இலம்பாடு சேர்ந்தது. இருப்பினும் குங்குலியத் தூபம் இடும்பணியினைக் கெடாமல் நடத்தினார். வறுமை வந்தது; அப்போது அவருடைய சுற்றத்தோடு மக்களும் வருந்தினார்கள்.

இந்தப் புராணத்தில் குங்குலியக் கலய நாயனாரின் மனைவியாரின் செயல் சிறப்பைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம். உணவில்லாமல் வருந்துகின்ற மைந்தர்கள், சுற்றத்தார்களைக் கருத்தில் கொண்டு நெல்வாங்கி வருவதற்காகத் தன் கணவராகிய குங்குலியக் கலய நாயனாரிடம் கோதில் மங்கல நூல் தாலி கொடுத்து அனுப்புகிறார். அவருடைய நோக்கம் அனைவரின் பசித்துன்பம் நீக்க வேண்டும்மென்பது; அதனால்தான் தாலியைக் கொடுத்து அனுப்புகிறார் கலயனாரின் மனைவியார். அந்தத் தொண்டு முதன்மைப்படுத்தப் பெறுகிறது.

ஆனால் நெல்வாங்கச் செல்லும் கலயருக்கு முன்னால் குங்குலியம் நிறைந்த பொதியை ஒரு வணிகன் சுமந்து செல்வதைக் காண்கிறார்; நெல் என்று நினைத்து விசாரிக்கிறார். அது குங்குலியம் என்று தெரிந்ததும் மனமும் முகமும் மலர்ந்து பொன்னைத் தருவதாகக் கூறிக் குங்குலியத்தை வாங்குகிறார். வாங்கியவர் விரைந்து சென்று இறைவனுடைய பண்டாரத்தில் குங்குலியத்தோடு தங்கி விடுகின்றார்; இறைவனைப் போற்றிக் கொண்டிருக்கிறார்.

இவற்றையெல்லாம் கண்ட இறைவன் அருளால் அளகை வேந்தனாகிய குபேரன் தன்னுடைய செல்வமெல்லாம் குறையும்படியாகப் பொன்குவியலும் நெல்லும் எல்லா வளனும் பொங்கச் செல்வமாக்கிக் கலயனாரின் மனையில் சேர்த்து விடுகிறான்.

கலயரின் மனைவியாரும் மக்களும் பசியால் வாடி இரவில் அயர்ந்து தூங்குகின்றனர். அப்போது நற்றவக் கொடியனார்க்குக் கனவிலே இறைவன் திருவருள் செய்கிறான். வீட்டில் நிறைந்த செல்வமெல்லாம் எம்பிரானின் அருளாம் என்று இருகரம் குவித்துப் போற்றுகிறார் கலயரின் மனைவியார். உடனே கணவனார்க்குத் திருவமுது அமைக்கத் தொடங்குகிறார்.

அதன்பின்னர்தான் அன்புடைய சிந்தை அடியவராகிய கலயர் அறியும்படியாக, "சாலநீ பசித்தாய்; உன் இல்லம் சென்று பாலின் இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக" என்கிறான் இறைவன். இல்லம் சென்ற கலயர் திருமனையாரை நோக்கி இந்தச் செல்வமெல்லாம் ஏது என்பதுபோல் வினவுகிறார். உடனே கலயரின் மனைவியார்

"*அல்லொத்த கண்டன் எம்மான்*
*அருள் தர வந்தது*" என்றார்.

அது கேட்ட கலயர், இறைவன் என்னை ஆளும் தன்மை இவ்வாறாக இருந்தது என்று தலைமேற் கொண்டார். பதும நற்றிருவின் மிக்கார் ஆகிய துணைவியார் கணவருக்கும் கண்ணுதற்கு அன்பரோடு அடிசில் ஊட்டினார் என்கிறார் சேக்கிழார்.

இப்புராணத்தில் நெல் வாங்கத் தாலியைக் கொடுத்த மனைவியார் என்பதால் அவருக்கு முதற்சிறப்பு. அந்தத் தாலியால் தான் குங்குலியம் வாங்குகிறார் கலயர். பசித்திருப்போருக்காக வருந்தும் மனைவியார் தன் தாலியைக் கொடுத்ததால்தான் இறைவன் முதலில் அவருடைய கனவில் தோன்றிச் செல்வம் சேர்ந்ததை உணர்த்துகிறார். அதனால்தான் அவரை நற்றவக் கொடியனார் என்கிறார் சேக்கிழார். அதன் பின்னரே கலயருக்குக் கனவில் தோன்றுகிறார். அது மட்டுமல்ல, செல்வம் சேர்ந்த காரணத்தைக் கலயர் வினவும் போது இறைவன் அருளால் வந்தது என்று கூறும் துணைவியார் முன்னதாகவே இறைவனின் அருளை உணர்ந்தார் என்பதும் தெரிகிறது.

திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருக்கடவூர் வந்த போது அவர்களிருவரையும் வரவேற்று மனையில் எய்தி இன்னமுதாக்கிய பெருமையும் கலயரையும் கலயரின் மனைவியாரையும்

சார்ந்ததுதான். எனவேதான் சேக்கிழார் கலயரின் துணைவியாரை நல்தவக் கொடியனார் என்றும் காதல் செய் மனைவியார் என்றும் திருவினையார் என்றும் தேனக்க கோதை மாதர் என்றும் பாராட்டுகிறார். எனவே கலயரின் பெருமைக்கு அவர்தம் மனைவியாரும் இன்றியமையாத பங்கு வகிக்கிறார் என்பதை அறியலாம்.

## மலர்க்கூந்தல் திருமகள்

வள்ளல் மானக்கஞ்சாறன் என்று மானக்கஞ்சாற நாயனாரைத் திருத்தொண்டத்தொகை குறிக்கிறது.மானக்கஞ்சாறன் என்னும் வள்ளல் என்று திருத்தொண்டர் திருவந்தாதி கூறுகிறது. ஆனால் எதனால் வள்ளல் என்பதையும் குறிக்கிறது. கலசமுலைக் கன்னி காதல் புதல்வி கமழ்குழலைப் பஞ்சவடிக்காகும் என்று கேட்ட சிவனடியார்க்கு மகளின் கூந்தலை அரிந்தளித்த வள்ளல் என்று குறிப்பிடுகிறது. மானக்கஞ்சாறனார் மகளின் வதுவை காணவந்த அடியார்க்கு மகளின் கூந்தலை அரிந்து கொடுத்தவர் என்று திருத்தொண்ட புராணசாரம் பேசுகிறது. எனினும் மானக்கஞ்சாற நாயனாரின் மகளைப் பற்றிக் கூறும்போது இறைவன் பணித்த வாக்கினால் வண்குழல் பெற்ற பேதை மாதை ஏயர்பிரானுக்கு உதவினார் என்று குறிப்பிடுகின்றது.

இப்புராணத்தில் மானக்கஞ்சாறர் பெருமை பேசப்படுகின்றது. ஆனால் மகள் பெருமை ஒன்றிரண்டு தொடர்களால் குறிக்கப் பெறுகின்றது. வதுவை காண வந்த அடியார்க்குக் கூந்தலை அரிந்து கொடுத்தவர் கஞ்சாறர். மகள் அதனை ஒப்புக் கொண்டு உதவினாரா என்பதற்குச் செய்தி இல்லை. எனவே தொண்டுக்காக நாயனார் செய்யும் செயலில் வாய்திறந்து ஒரு சொல்லும் சொல்லாததே தொண்டெனக் கொள்ள வேண்டும். மகள் மறுத்துரைக்காமல் கூந்தலை அரிய உதவினார் எனக் கருத வேண்டும். அவள் மறுத்திருந்தால் மானக்கஞ்சாறர் பெருமை எவ்வாறு வெளிப்படும். எனவேதான் சேக்கிழார் அந்த மகளின் பிறப்பைப் பற்றிக் கூறும்போது "பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்" என்கிறார். மானக்கஞ்சாறர் மனைவியும் பேசியதாக இல்லை.

மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி என்று கஞ்சாறர் மனைவி குறிக்கப் பெறுகிறார். அவரிடமும் கேட்டதாகச் செய்தி இல்லை.

கேசத்தினால் ஆன பூணூல் அணிந்த மார்பனாக வரும் அடியார் கஞ்சாறர் மகளின் கூந்தலைப் பூணூலுக்காகக் கேட்கப் போகிறார் என்பதை முன்கூட்டியே சேக்கிழார் உணர்த்தி விடுகிறார். பூப்பயிலும் சுருட்குழல், தேனக்க மலர்க்கூந்தல் திருமகள் என்கிறார். அதனால்தான் மேகம் தழைத்தது போன்று வளர்ந்த மலர்க்கூந்தலைப் பார்த்து இவள்தன் மயிர் பஞ்சவடிக் காகும் என்கிறார் அடியார். இருள் செய்த கருங்கூந்தலை அடியில் அரிந்து வந்திருந்த அடியவர்க்கு வழங்குகிறார் மானக்கஞ்சாறர் அதுபோதுவரை அவரது மகள் அமைதி காத்து மானக்கஞ்சாறரின் செயலுக்குத் துணையாக நிற்கிறார் எனவே கொள்ள வேண்டும். இருப்பினும் மானக்கஞ்சாறர் தம் மனைவியிடமோ மகளிடமோ இதனைக் கூறி அனுமதி பெறவில்லை என்பதால் பெண் உரிமை மறுக்கப்பட்டதையே இப்புராணம் காட்டுகிறது. எனினும் அடியாரின் தொண்டுக்குப் பெண்களே துணையாய் இருந்து பெருமை சேர்த்தனர் என்பதையும் இப்புராணம் சுட்டுகிறது எனலாம்.

## அருளாளர்கள் வழங்கிய வட்டார வழக்குச் சொற்கள்

சித்தாந்த ரத்தினம். பா. அசோக்குமார், மதிப்பியல் தலைவர்,
திருப்பாதிரிப்புலியூர்ச் சித்தாந்தச்
சைவநெறி மன்றம், கடலூர் - 607001.

நமது அருளாளர்கள் அருளிச் செய்த பல்வேறு தோத்திர நூல்கள் நாம் அன்றாடம் இறைவனை ஓதி உணரப் பயன்படுகின்றன. அவ்வாறு ஓதி உணரும் அருள் நூல்களில் ஆங்காங்கே அருளாளர்கள் திருத்தல யாத்திரையாகச் செல்லும்போது தங்கி வாழ்ந்து கண்டறிந்த மக்களின் வழக்குச் சொற்களைத் தம் நூலில் பதிவு செய்து உள்ளது அவர்கள்தம் வாழ்க்கைக் குறிப்பின் ஒரு சான்றாக உள்ளது பற்றி இக்கட்டுரை சிந்திக்கிறது.

இன்றுள்ள நிலையில் மேற்கொள்ளும் தலயாத்திரைப் பயணத்தில் ஒரே நாளில் பல தலங்களைத் தரிசித்தாலும் அந்தக் காலத்தில் நடந்தே சென்று தலங்கள் தோறும் பாடியபோது அருளாளர்கள் பட்ட

துன்பங்கள் சொல்லி மாளாது. இருப்பினும் இறைவனின் துணையினால் துன்பங்கள் பொறுத்துத் தலங்கள் தோறும் சென்று வழிபட்டதைப் பாடலாகப் பாடி அருளிச் செய்ததில் தரிசனம் செய்த ஊர் பற்றிய செய்திகள் முழுமையும் தந்த தகவல்களாக உள்ளதன் சிறப்பை என் என்பது?

ஊர்ப் பெயர், சுற்றுப்புறச் சூழல்கள், புராணச் செய்திகள் எல்லாம் பதிவு செய்யும்போது அவ்விடத்து மக்களோடு மக்களாக நெருங்கிப் பழகியதன் அடையாளமாக மக்களின் பேச்சு வழக்கையும் உடன் பதிவு செய்தது சிந்தைக்குப் பெருவிருந்தாக உள்ளது.

திருஞானசம்பந்தப் பெருமான் மதுரைக்கு அழைக்கப்பட்ட வகையில் எழுந்தருளியதைக் கேள்விப்பட்ட சமணர்கள் காழ்ப்பு உணர்வால் சம்பந்தர் தங்கிய திருமடத்திற்குத் தீ வைத்தனர். இதனைத் திருவாலவாய் பெருமான் திருவருளால் உணர்ந்த சம்பந்தர்,

*செய்யனே திருஆல வாய்மேவிய*
*ஐயனே அஞ்சலென் றருள்செய் எனைப்*
*பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்*
*பையவே சென்று பாண்டியற் காகவே*

என விண்ணப்பித்தார். இவ்விண்ணப்பத்தில் பயன்படுத்திய “பைய” என்ற சொல் பாண்டி நாட்டு வட்டார வழக்குச் சொல் ஆகும்.

பைய – மெதுவாக என்பது பொருள். பாண்டிய நாட்டில் மெல்ல நட, மெதுவாகப் போ என்பதற்குப் பைய நட, பையப் போ என்பர். இந்தச் சாதாரண வழக்குச் சொல்லைச் சம்பந்தர் தம் ஞானப்பனுவலில் பதிவு செய்யும்போது அச்சொல் தெய்வீக இலக்கியத்தரம் பெற்று விடுவதைச் சேக்கிழார் பெருமான் சம்பந்தர் வரலாற்றில் விவரிக்கின்றார்.

சைவத்தைக் காப்பாற்றும் பொருட்டு மங்கையர்க்கரசியாரால் வரவழைக்கப்பட்ட சம்பந்தர் தமக்குத் தீங்கு இழைத்த சமணர்களைப் பழிவாங்க நேரிடையாகப் பாடாமல் சமணர்களுக்கு மன்னர் அனுமதி தந்தாரோ? இல்லையோ? எனத் தெரியாத நிலையில் “பையவே சென்று பாண்டியற்காகவே” என்றதில் ஓர் அரசியல் தரம் உள்ளதை உணருமாறு உள்ளது.

அது என்னவெனில் பொதுவாக நாட்டில் நடக்கும் எந்த ஒரு செயலுக்கும் மன்னனையே காரணம் குறிப்பர். அந்த வகையில் சம்பந்தரது பாடல் அமைந்தாலும் தம்மை அழைத்தது மங்கையர்க்கரசியாரின் சைவசமயக் காப்பின் எண்ணம் ஈடேற வேண்டியே "பையவே" எனப்பட்டதாம் என்பது சேக்கிழார் கருத்து. அதை

1) பாண்டிமா தேவியார் தமது பொற்பிற்
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்
2) ஆண்டகையார் குலச்சிறையார் அன்பி னாலும்
அரசன் பால் அபராதம் உறுத லாலும்
3) மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
வெண்ணீறு வெப்பகல புகலி வேந்தர்
4) தீண்டியிடப் பேறுடைய னாத லாலும்
தீப்பிணியைப் பையவே செல்க

என்றார்.

சேக்கிழாரின் இப்பாடலில் சம்பந்தர் தம் திருமடத்திற்குச் சமணர்கள் வைத்த தீ மன்னன் மீது விரைந்து பற்றுமாறு கூறியிருந்தால் பல தீமைகள் ஏற்பட்டிருக்கும் என்பதால் அவற்றைத் தவிர்க்கவே "பைய" எனப்பட்டதாகச் சேக்கிழார் கூறினார்.

1) மங்கையர்க்கரசியாரின் மாங்கல்யம் காப்பாற்றவும் 2) அமைச்சர் குலச்சிறையாரின் அன்பு மன்னன் மீது மேலும் ஓங்க வேண்டியும் 3) மன்னனின் அறியாமைக்கான சிறு தண்டனையாகவும் 4) மீண்டும் பாண்டி மண்டலம் சிவப்பேறு பெறவும் 5) சம்பந்தர் பூசும் திருநீற்றால் மன்னன் வெப்பு நோய் நீங்க வேண்டியுமான ஐந்து செயற்கரும் செய்கைகளுக்காகப் "பைய" எனப்பட்ட தாம்.

இப் பைய என்ற சொல்லைப் பாண்டிய நாட்டின் திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசகப் பெருமான் தம் திருவாசகத்தின் நிறைவுப் பதிகமான அச்சோ பதிகத்திலே எடுத்தாள்கிறார். மண்ணின் மைந்தர் எடுத்தாள்வதில் வியப்பொன்றும் இல்லைதானே.

1) தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப் 2) பையவே கொடுபோந்து பாசமெனும் தாழ்வுருவி 3) உய்யுநெறி காட்டுவித்திட்டு

ஓங்காரத்து உட்பொருளை 4)ஐயன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே என்று பாடி "பைய" என்ற சொல்லைத் தம் திருவாயால் பாடியிருக்கிறார். மெது மெதுவாகத் தன்னைப் பக்குவப்படுத்தியதை பையவே கொடு போந்து என்றார்.

ஔவையார் "பையச் சென்றால் வையம் தாங்கும்" என்று கொன்றை வேந்தனில் கூறினார். தெய்வத் தமிழ் மொழி தோற்றமளித்தது பற்றிக் கூறும் தமிழ் மூதறிஞர் தஞ்சாவூர் பள்ளியகரம் திரு.நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள் "பைய நாவை அசைத்த பழந்தமிழ் ஐயை" என்றார்.

இங்ஙனம் பாண்டி நாட்டுத் தமிழ் பைய்யப் பைய்ய பிற இடங்களிலும் பரவியதைக் காணலாம். மக்களின் நாவில் தங்கும் சொல் அருளாளர்களின் பாவில் பதிவாகும் போது அதற்கான மகிமையே மகிமை எனலாம்.

இப்படிச் சம்பந்தரைப் போலவே திருநாவுக்கரசராம் அப்பர் பெருமான் பாண்டிப் பதினான்கில் ஒன்றான திருப்புத்தூர்த் திருத்தளிநாதரைத் தரிசித்த போது பாடிய பதிகத்தில் "சங்காத்தம்" என்ற வட்டார வழக்குச் சொல்லைப் பயன்படுத்துவது அவர் அவ்வூர் மக்களுடன் பழகிய பழக்கத்தின் அடையாளத்தை நினைவு கூர்தலாக உள்ளது.

பாண்டி மண்டலத்தின் தென்பகுதியான திருப்புத்தூர், செட்டிநாட்டைச் சார்ந்த ஊராகும். பாண்டிய நாட்டு வழக்காற்றில் உறவே தேவையில்லை என்பதற்குச் "சங்காத்தமே வேண்டாம்" என்பர். தொட்டுத் தொடரும் உறவையே சங்காத்தம் என்பர். இது நட்பைக் குறிக்கும். இதை அப்பர், திருத்தளிநாதரின் பண்புகளை அடுக்கிக் கூறும்போது தங்கத்தட்டில் வைரத்தைப் பதிப்பது போலப் பதிக்கிறார்.

*கருமருவு வல்வினைநோய் அகற்றி னான்காண்*
*காமருபூங் கச்சிஏ கம்பத்தான்காண்*
*பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும் பெரும்பற்றத்*
*தண்புலியூர் மன்றாடிகாண்*
*கருமருவு கொலைத்தடக்கை அளகைக் கோன்தன் சங்காத்தி*
*ஆரூரில் தனியானைகாண்*

*திருமருவு பொழில்புடைசூழ் திருப்புத் தூரில்*
*திருத்தளியான் காண்அவன்என் சிந்தை யானே.*

அழகாபுரிக்கு அதிபதியான குபேரனைச் சிவபெருமான் தோழமை கொண்டதாகப் புராணம் கூறும். சங்காத்தம் என்ற சொல்லைச் செட்டிநாட்டு மக்கள் பெரிதும் பயன்படுத்துவர். செட்டிநாட்டைத் தொட்டுக் கொண்டுள்ள திருப்புத்தூரில் வழங்கிய வட்டார வழக்கை அப்பர் அப்படியே பயன்படுத்தினார்.

இப்படிக் கூறியதில் வேறு பல பொருத்தமும் உள்ளதைக் கண்டு இன்புறலாம். பட்டினத்தார் வரலாற்றோடு குபேரனுக்கு ஒரு தொடர்பு உண்டு. தோழனாகிய குபேரனோடு ஒரு நாள் சிவபெருமான் வானவீதியில் உலா வந்தபோது பூலோகக் காவிரிப்பூம்பட்டினத்தைப் பார்த்ததும் குபேரனுக்கு அந்த ஊர் மீது ஏதோ ஒரு பற்று வந்துவிட்டதாம். இதனை உணர்ந்த சிவபெருமான் குபேரனையே பட்டினத்தார் மரபினராகப் பிறக்க வைத்ததாக ஒரு வரலாறு உண்டு.

அந்தத் தெய்வீகத் தொடர்பை நினைப்பிக்கும் விதமாகவும் இந்த சங்காத்தம் என்ற சொல்லைக் குபேரனோடு பொருந்துமாறு செட்டி நாட்டுத் திருப்புத்தூரில் பாடியது மிக மிகப் பொருத்தமாக உள்ளதன்றோ.

எனவே அருளாளர்களின் அருள் வாக்கு என்பது வட்டார வழக்கையும் பயன்படுத்திய வகையில் தெய்வத் தமிழ்த் தொண்டைப் புரிந்தார்கள் எனலாம்.

## சைவ நெறியே அனைத்து சமயங்களுக்கும் தாய்

**இல. பழனியப்பன்**

"மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்" இது கந்தபுராணம் தந்த கச்சியப்ப சிவாச்சாரியாரின் அருள்வாக்கு

தொடக்க காலம் முதல் இன்று வரை சைவ நெறி உலகளாவிய கண்ணோட்டத்தில் தான் உலா வந்து கொண்டிருக்கிறது.

அது சமயம் கடந்த தெய்வீக நெறி. வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து வானுரும் தெய்வத்தை அடையும் வழிகாட்டும் ஒப்பற்ற நெறி எந்தச் சமயமும் வேண்டாத பொதுத் தன்மையை.

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்

கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்

என்றும் அற்புதமாகத் தந்துள்ளது எனலாம். இதைவிட சைவ நெறியின் அடிப்படைத் தத்துவங்களை வேறு எங்கேயும் காண முடியாது.

சைவநெறி என்று கூறியிருப்பது ஒன்றே சைவ நெறியின் அற்புதத் தன்மையைக் காட்டுகிறது அல்லவா. வான்மழையே உயிர்கள் வாழ அடிப்படைக் காரணம். அரசு செங்கோல் வழுவாது நடப்பதே அடுத்துச் சொல்லப்பட்டுள்ள நீதி; இந்த இரண்டும் செம்மையானால் மட்டுமே உயிர்கள் குறைவிலாது வாழ முடியும் !

"உயிர்கள்" என்ற சொல்லாட்சி எல்லா உயிர்களுக்கும் காவலனாகத் திகழும் சைவநெறியின் தனித்தன்மை தானே?

மனித உயிர்களைப் போல மற்ற உயிர்களை நமது சைவ நெறி நேசிக்கும் உயர்தன்மை வேறு எங்கேனும் காண முடியுமா?

இவற்றை உள்ளடக்கியதால் தான் மேன்மை கொள் சைவ நெறியாகக் கச்சியப்ப சிவாச்சாரியார் அவர்களால் முத்திரை பதித்துக் காட்டப்பட்டுள்ளது.

சைவத்திருமுறைகளில் ஒன்றான திருவருட்பாவில் வள்ளலார் சைவ நெறியின் சன்மார்க்கச் சிந்தனையை அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். சைவநெறியின் ஒட்டு மொத்த சாராம்சமே அதிலே மிளிர்கிறது.

வள்ளலார் பாடல்களில் வேண்டாம் என்ற எதிர்மறைச் சிந்தனையை நாம் காணவே முடியாது.

நம்மை மீறிய சக்தியாகிய பரம்பொருளை இறைவனை மலரடி தொழுது நினைப்பவர்களே எனக்கு உறவாக வேண்டும் என்று முன்னோடியான இறைவிண்ணப்பத்தை வள்ளலார் முன் வைக்கிறார்.

"உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசுபவர் உறவு கலவாமை வேண்டும்" என்று மனத்தூய்மைக்கு வித்திடுகிறார்.

அதற்கு அடுத்த நிலை அதைவிட அற்புதமானதோர் நிலையாகும். இறைவனின் புகழைப் பேசுவதே பெருமை. அதற்கு நான் பொய்கள்

பேசாதிருக்க வேண்டும் என்று வேண்டுவதோடு

பெருநெறி - உயர்நெறி பரந்த நெறியை நான் கடைப்பிடிக்க வேண்டும் அதற்கு

மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும் என்று சற்றுக் கடுமையாகவே வள்ளலார் வேண்டுகிறார்.

"மதமானபேய்" என்ற சொல்லாட்சி மிக நுட்பமாக இங்கே அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். அவர் வாழ்ந்த காலகட்டத்தில் மதம் என்ற தீவிர நிலை உலகில் இருந்தது உண்மையே.

தமிழ் இலக்கியத்தில் சமயத்துக்கு உதவுவது சமயமாகப் பார்க்கப்பட்டது. அது மட்டுமே உண்மையான ஆறுதல் நெறி அதுவே சைவநெறி.

நமது சமரச சன்மார்க்கம் தீவிர மற்ற அரவணைப்புத் தன்மை கொண்ட ஒரு நீதி.

சைவநெறியின் உயிர் ஓட்டம் இந்த நிலைதான் என்பதையே அது வலியுறுத்துகிறது.

உலகில் எல்லா மதத் தலைவர்களும் சைவ நெறியைத் தங்களின் முன்னுரையாகக் கொண்டே தொடக்க காலத்தில் செயல்பட்டார்கள்.

அந்நிய ஆட்சியின் காரணமாக மதமான பேய் நம் நாட்டிலே நடமாடத் தொடங்கி விட்டது என்பதும் உண்மையே!

நமது அரசியல் சட்டம் சமயச்சார்பற்ற உன்னதக் கோட்பாட்டுடன் செயலாற்றுவதற்குச் சைவநெறி காட்டிய நீதியே அடிப்படைக் காரணமாகும்.

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"

"யாதும் ஊரே! யாவரும் கேளிர்

ஒன்று பரம் பொருள் நாமதன்" மக்கள் இது தானே சைவநெறி காட்டும் உன்னத நீதி. இதை யார்தான் மறுக்க முடியும்?

சைவநெறியின் பாதுகாவலர்களாக நமது சித்தர்கள் விளங்கினார்கள் இன்றும் விளங்குகிறார்கள்.

இவர்களில் திருமூலச்சித்தரே தலையானவர்.

நால்வர் ஆகிய அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் சைவ நெறியை உலகளாவிய அளவில் வளர்க்கப் பாடு பட்டவர்கள்.

ஆதி சங்கரர் இவர்களுக்கெல்லாம் முன்னோடியாக சைவநெறியை வளர்த்த ஆன்மீகச் செம்மல். பிற்காலத்தில் காஞ்சிப் பெரியவர், திருமுருக கிருபானந்த வாரியார் ஆகியோர் சைவநெறியின் இருகண்களாகத் திகழ்ந்தார்கள். நமது திருமுறைகள் ஆன்மீகக் கலைச் செல்வங்கள்.

இத்தகைய சைவநெறியை நாம் ஒருங்கிணைந்து உலக அளவில் இளைஞர்களிடம் பரப்ப வேண்டியது காலத்தின் கட்டாயம்.

சைவநெறியின் சிறப்பைப் உணர்ந்த அறிஞர் ஜி.யு. போப் தேவாரத்தையும் திருவாசகத்தையும், திருக்குறளையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பெருமை சேர்த்துள்ளார்

நமது கோவிலூர் மடலாயம் இதர மடலாயங்களும் பல்வேறு சைவ வழிமுறைகளை மக்களுக்கு பல்வேறு திட்டங்கள் மூலம் செயல்படுத்துகிறார்கள்.

பல்கலைக் கழகங்களிலும் பாடமாகக் கற்பிக்கப்படுகிறது. வெளிநாடுகளில் உள்ள எல்லாப் பல்கலைக் கழகங்களினும் பாடத்திட்டத்தில் சேர்க்கப்படும் நன்னாளே.

உலகைக் காக்கும் சைவநெறியாகிய நீதிக்கு மனிதகுலம் செய்யும் ஒப்பற்ற தொண்டாக அமைய முடியும்.

## திருவிளையாடற்புராணம்

### பரியை நரி ஆக்கியது

மங்கல வாத்தியங்கள் பல இயம்பின. சேனைகள் ஆரவாரித்தன. மகளிர் அஷ்டமங்கலப் பொருள்கள் தாங்கி எதிர் வந்தனர். அரிமர்த்தன பாண்டியன் கொடுத்த பலவகைச் சிறப்புகளுடனே தனது திருமனை சேர்ந்தார் வாதவூரர். அதுசமயம் தன்னை வந்து வினவியவர்கட்கெல்லாம் இன்மொழி புகன்றார்.

அனைவரையும் அவரவர் வீட்டிற்குச் செல்ல விடுத்த பின் தான் ஒரு தனியிடத்தே அமர்ந்து சிந்திக்கலானார். "சோமசுந்தரப் பெருமான் நாம் வேண்டிக் கொண்டபடியே குதிரை வாங்கும் பொருட்டு நாம் கொண்டு சென்ற பொருள்னைத்தையும் தமது அடியார்களும் தாமுமாகக் கைக்கொண்டார்; எளியேனையும் பணி கொண்டு பிறவிப் பிணியைப் போக்கி அருள் செய்தார். மேற்கொண்டு பாண்டியனது

உளத்திற்கிசைந்த நல்ல குதிரைகளையும் கொணர்ந்து இனிக் கவலையே இல்லை என்று ஆகுமாறு செய்தருளினார். இனி யான் சிவானந்தானுபவத்திலே எப்போதும் நிலை நிற்குமாறு நம்மைத் தவ வழியில் செலுத்துதல் வேண்டும்", என்ற பேரவாக் கொண்டார். இருமை இன்பங்களிலும் பற்று சிறிதேனும் இன்றிச் சோமசுந்தரப் பெருமானின் திருவடிகளையே தமது உள்ளத்தில் பதித்திருந்தார்.

பிற்பகல் சாய்ந்தது; மாலை வந்தது; மாலை மயங்கியது; இரவு வந்தது. நள்ளிரவு நேரம். அரிமர்த்தன பாண்டியனது அரண்மனைக் குதிரைப் பந்தியிலிருந்த குதிரைகள் எல்லாம் சிவபெருமான் திருவிளையாடலால் தமது சுயமான நரி உருவத்தை எடுத்துக் கொண்டன.

நரிக் கூட்டங்கள் தப்பியோட ஆரம்பித்தன. அவை பெருத்த ஊளையிட்டுத் திரிந்தன. லாயத்திலே கட்டப்பட்டிருந்த உண்மையான குதிரைகளைக் கடித்துக் குதறி ரத்தம் குடித்தன. கடிபட்டு இன்னலுற்ற குதிரைகள் ஓலமிட்டன. நரிகளின் ஊளையும் குதிரைகளின் பயங்கரக் கனைப்பும் சேரக் காவலாளர் திடுக்கிட்டு எழுந்தனர். முன்தினம் உத்தமக் குதிரைகளாக வந்தவை எல்லாம் அப்போது நரிகளாகி மற்றக் குதிரைகளின் குடலைப் பிடுங்கித் தின்று கொண்டிருப்பதைப் பார்த்தனர், காவலர்கள் எழுந்து வருவது கண்ட நரிகள் மதில்களைத் தாண்டியோடின; சாளரத்தின் வழியே பாய்ந்தோடின; நுழை வாசல்வழியாகவும் தமக்குச் சந்து கிடைத்த இடங்கள் மூலமாகவும் ஓடிச்சென்றன. லாயத்திலே எஞ்சிக் கிடந்தவை : நொண்டி நரிகளும் நோய்கண்ட நரிகளும், குருட்டு நரிகளும் கிழட்டு நரிகளும் தான். குதிரைப் பந்தியிலிருந்து வெளிப்பட்ட நரிகள் எல்லாம் குளங்கள், தோட்டங்கள், தருமசாலைகள், தெருக்கள், ஆலயங்கள், சந்திகள் எல்லாவற்றிலும் பரவி ஊளையிட்டுத் திரிந்தன. இன்னிசைக் கருவிகளின் ஒலியும், இன்பத் தமிழோசையும், வேத நாதமும் மண்டிக்கிடக்கும் மதுரையம்பதியிலே நரிகள் ஊளையிடுகின்ற அவல ஒலியே அன்றிரவு மலிந்தது. மக்கள் அனைவரும் துயில் நீங்கி எழுந்துவிட்டனர். நரிகள் தெருக்களிலுள்ள பல வீடுகளில் புகுந்து பெருந்துன்பம் விளைத்தன. பல பொருள்களை நாசம் செய்தன. புறா,

கிளி, கோழி ஆகிய பறவைகள், ஆட்டுக்குட்டி, பன்றிக் குட்டி ஆகிய மிருக வகைகள் ஆனவற்றைக் கொன்று தின்றன. நள்ளிரவு நேரத்திலே எங்கும் ஒரே அமளி நிலவியது. கோட்டை வாசல்கள் திறக்கப்பட்டதும் நரிகள் எல்லாம் ஊரை விட்டோடிக் காட்டுக்குள் சென்று மறைந்தன.

ஒருவாறாக விடிந்தது. குதிரை லாயக் காவற்காரர்கள் மிகுந்த பயமடைந்து பாண்டியனது சபையை அடைந்தனர்; மன்னனை வணங்கி நடுக்கத்துடன் பதுங்கி நின்று "வேந்தே! நேற்று அழகான தோற்றம் கொண்டு நல்ல குதிரைகளாக வந்தனவெல்லாம் நரிகளாக மாறி ஏற்கனவே லாயத்திலுள்ள குதிரைகளுக்கு யமனாக ஆயின. ஊர் முழுதும் பெருந் தீங்கு இழைத்து விட்டுக் காட்டுக்கு ஓடிப்போய் விட்டன," என்று கூறினார்கள். பந்திக்காவலர் சொன்ன அவலச்சேதி மன்னனுக்குக் கடுங்கோபத்தை உண்டாக்கியது. அவனது கண்கள் சிவந்தன ; சீறினான். அதுகண்ட மந்திரிமார்களும் அச்சம் கொண்டனர். முதல் நாளிலே குதிரைகளைக் கண்டு பேரானந்தம் எய்திய அரசன் அதே குதிரைகள் திரும்ப நரிகளாகி ஓடிவிட்டன என்பது கேட்டுத் துக்கசாகரத்துள் மூழ்கினான். பின்னர் பக்கத்திலிருந்த மற்ற அமைச்சர்களைப் பார்த்து, "அமைச்சர்களே! வாதவூரன் இருள்மனம் கொண்ட கள்வன் என்பது தெளிவாகிவிட்டது. நமது பொருள் எல்லாவற்றையும் கவர்ந்து கொண்டு விட்டான்; நரிகளை யெல்லாம் பரிகளாக மாற்றி நம்மிடம் வரச்செய்தான், என்ன மாயம் செய்து விட்டான் பார்த்தீர்களா? வாதவூரனை என்ன செய்யலாம் !" என்று கேட்டான். மந்திரிமார்களோ, "வாதவூரன் செய்தது பெரும்பாவம், கடுங்குற்றம் அவன் செய்நன்றி கொன்ற தீயவன். நாங்கள் சொல்வதற்கு என்ன இருக்கிறது" எனக்கூறித் தலை கவிழ்ந்து நின்றனர்.

மாணிக்கவாசகரோ அப்போது ஞானப் பேரின்பக் கடலுள் மூழ்கியிருந்தார், "மன்னன் மனத்திற்குகந்த உத்தமஜாதிக் குதிரைகளை அளித்துக் கவலையை ஒழித்தோம்," என்றெண்ணிக் களிப்புமிகுந்த உள்ளத்தோடு இருந்தார். நிகழ்ந்த வினை எதுவும் தெரியாதவராகி வேந்தனிடத்தே சென்று நின்றார். அரிமர்த்தனன்

வாதவூரரைச் சினத்துடன் பார்த்து, "அமைச்சரே ! நன்று செய்தீர் ! அளவிடமுடியாதபடி எனது பொருளைக்கொண்டு சென்று குதிரைகளாகக் கொணர்ந்து நேர்த்தியாகக்கொடுத்தீர் ! உம்மைப்போன்று ராஜகாரியம் செய்து முடிப்பவர் யார்?" என்று சீறினான். "ஏன் ? குதிரைகளுக்கு என்ன குற்றமோ?", என்று வினாவினார் வாதவூரர். "குற்றமா? குற்றம் ஏதும் உண்டோ? நடுராத்திரியே அவையெல்லாம் நரிகளாக மாறியது போதாதா? குதிரைகளின் குடலைப் பிடுங்கித் தின்றது போதாதா? ஊரெங்கும் ஊறு விளைத்து ஊளையிட்டுத் திரிந்து அவலம் செய்தது போதாதா? இவ்வளவு நாட்கள் நல்லவனைப்போல நடந்து காட்டிப் பாசாங்கு செய்ததெல்லாம் என்பொருளைக் கவர்ந்து கொள்வதற்காகத்தானா? உனது மந்திரி வேலை மிக நன்றாக இருக்கிறது? புனிதமான பிராமண குலத்தில் தோன்றிய பெருமை வேறு உனக்கு," என்று கடிந்து தண்டலாளர்களைப் பார்த்து, "இவனைக் கொண்டு செல்லுங்கள், எங்கும் போகவிடாதீர்கள், என்ன உபாயம் செய்தேனும் நமது பொருள் அனைத்தையும் வாங்குங்கள்," என்று உத்தரவிட்டான். காலதூதரை நிகர்த்த தண்டலாளர் உடனே தரும மூர்த்தியான திருவாதவூரரைப் பிடித்திழுத்துச் சென்றனர். உச்சி வெயிலிலே சூரியனைக் காணும்படி அசையாமல் நிற்கச் செய்தனர். அவரது நெற்றியிலும் கைகளிலும் கல்லை ஏற்றித் துன்பம் செய்தனர்.

துன்பம் பொறுக்க முடியாத வாதவூரடிகள் கீழே விழுந்தார். ஞாயிறு, திங்கள், நெருப்பு என்ற மூன்று சுடர்க் கண்களுடைய சிவபெருமானை விளித்துத் துதிக்கலானார். "நாதனே! வேதனே! காலனைக் காய்ந்தவனே! வேதப் பரியேறும் சேவகனே! என்னைக் காவாயோ? என்றெல்லாம் முறையீடு செய்தார். சோமசுந்தரப் பெருமான் திருச்செவி சாய்த்தருளினார். அவரது மனம் நெகிழ்ந்தருளியது. பரமபக்த சிகாமணியான மாணிக்கவாசகரைக் காக்கத் திருவுளம் கொண்டார்.

வையையாறு பெருவெள்ளம் கொண்டு பெருக்கெடுத்துப் பரவிவரல் வேண்டுமெனத் திருவுளம் கொண்டார் சிவபெருமான். இறைவனது திருவுளக் குறிப்பை உணர்ந்த வையையும் பெருவெள்ளம் புரட்டிப்

பேரோசையுடன் வந்தது. நதி, கரைகளையுடைத்துக் கொண்டு பாய்ந்தது. மரங்களை வேரோடு தூரோடு பறித்து அடித்துச் சென்றது. கரும்பு, வாழை, நெல் ஆகிய பயிர்களையெல்லாம் வாரி விழுங்கிச் சென்றது. இரைச்சல் செய்து பொங்கிப்பெருகி நுரைத்துக் கலங்கி வந்த வையையாற்று வெள்ளம் மதுரைமா நகரத்தின் மதிலுக்குப் பக்கத்திலே வந்து பல வீடுகளையும் குடிசைகளையும் புரட்டித் தள்ளிச் சென்றது. மதிற் சுவரையும் தாண்டி ஊருக்குள்ளே புகுந்துவிட்டது. வெள்ளம் பல தெருக்களையும் சூழ்ந்து கொண்டது.

வையையின் செய்கை கண்ட நகரத்து மாந்தர் எல்லாரும் பயந்து நடுங்கினர். செய்வது இன்னதென்பது தெரியாமல் ஏங்கித் தவித்தனர். "இவ்வூர் இன்னல் கடலுள் மூழ்கக் காரணம் என்ன? நேற்றிரவுதான் நரிகள் கடும் துன்பம் இழைத்தன; என்றும் இவ்வளவு பெருகாத நதி ஏன் இப்போது பெருகித் துன்பம் செய்கிறதோ? பாண்டிய மன்னன் செங்கோல் நெறி தவறி விட்டானோ? சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலா?" என்றெல்லாம் பலபடியாகத் தமக்குள் ஐயவினாக்களை எழுப்பிக் கொண்டு அவதிப்பட்டனர். "சிவபெருமான் அருள்புரிந்தாலல்லாமல் இவ்வையையாறு அடங்கப் போவதில்லை," என்றே பலர் கூறினர்.

வெள்ளம் புகுந்து பெருகி வருவதைக் கண்ட தண்டலாளர்களும் தத்தம் உடைமைகளைப் பாதுகாக்க எண்ணி வாதவூரரை விட்டுச் சென்றனர். விடுதலை பெற்ற திருவாதவூரர் திருக்கோவில் சென்றார். சோமசுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்தார். பக்திச் சுவைநனி சொட்டச் சொட்டத் தமிழிசையால் பெருமானைத் தோத்திரம் செய்து வணங்கினார். பேரின்பக் கடலுள் மூழ்கி இருந்தார்.

*(தொடரும்...)*



## மடாலய நிகழ்வுகள்

22.1.2022 அன்று இலக்கியப் பூங்காவில் சிலப்பதிகாரம் - வஞ்சிக்காண்டம் நீர்ப்படைக்காதை பற்றி முனைவர் இரா. சுகுணா உரையாற்றினார்.

26.1.2022 அன்று குடியரசு தினவிழா மடாலயத்தின் முன்பு நிகழ்ந்தது. உடற்கல்வியியல் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் பெவின்சன் கொடியேற்றி வைத்து உரையாற்றினார். சுவாமிகளின் ஆசியுடன் நடைபெற்ற நிகழ்வில் அண்ணாமலை பல்கலைக்கழக மேனாள் ஆங்கிலப் பேராசிரியர் முனைவர் எல். திருநாவுக்கரசு உரையாற்றினார். திருமதி மணிமொழி மோகன் வழங்கிய வரவேற்புரையுடன் தொடங்கிய விழா முனைவர் மாயாண்டி அவர்களின் நன்றியுரையுடன் நிறைவுற்றது. மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் திரளாகக் கலந்து கொண்டனர்.

26.2.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வு உலகம் சுற்றிய தமிழர் சோம.லெ. அவர்களின் படைப்புகள் பற்றிய கருத்தரங்கமாக அமைந்தது. முனைவர் கரு. முத்தையா, முனைவர் தேவி நாச்சியப்பன், முனைவர் நா. வள்ளி, கம்பன் அடிசூடி திரு.பழ. பழனியப்பன், பேரா.ம. கார்மேகம் ஆகியோர் உரை நிகழ்த்தினர். திரு. சோம.லெ. அவர்களின் திருமகன் திரு.சோம.லெ. சோமசுந்தரம் உள்பட அறிஞர்கள் பலர் நிகழ்வில் கலந்து கொண்டனர்.

17.3.2022 அன்று ஆண்டவர் குருபூசையை முன்னிட்டு, காரைக்குடி திருநாவுக்கரசர் இறைபணி மன்றத்தாரால் திருவாசகம், முற்றோதல் நடைபெற்றது.

18.3.2022 அன்று ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் குருபூஜை மிகச் சிறப்பாக நடைபெற்றது.

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**